# பைந்தமிழ் வாசகம்

## முதல் வகுப்பிற் குரியது

[புதிய பாடதிட்டத்தை ஒட்டி எழுதப்பட்டுள்ளது.]

ஆசிரியர் :
வித்வான் ம. பெரியசாமிப் பிள்ளை
முன்னைய தலைமைத் தமிழாசிரியர், E. R. உயர்நிலைப்பள்ளி,
திருச்சிராப்பள்ளி.




T. G. கோபால் பிள்ளை
பதிப்பாளர் :
தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி | 2/27, பிராட்வே ஜி. டி., சென்னை

 1954 [விலை அணா 4

# முன்னுரை

இளஞ்சிறுர்க்குத் தாய்மொழி கற்பிக்கத் தொடங்குங் கால், எழுத்துக்களை முதலில் கற்பித்து அவைகளினின்று சொற்களையும் அச்சொற்களினின்று வாக்கியங்களையும் கற்பிப்பது தொன்றுதொட்டுக் கையாளப்பெற்ற முறை. பிள்ளைகள் பள்ளிக்கு வருதற்கு முன்னரே அவர்கள் அறிந்துள்ள சொற்களைப் படங்கள் மூலமாகவும் பொருள் களைக் கொண்டும் வருவித்து, அச்சொற்களின் உதவி கொண்டே அவற்றில் வரும் எழுத்துக்களைக் கற்பித்தலும், ஆங்காங்குக் கற்ற எழுத்துக்களாலாகிய வேறு பல சொற் களையும் சொற்றொடர்களையும் பயிற்சிகளின் மூலமாகக் கற்பித்தலும் இடைக்காலத்தில் தோன்றிய முறையாகும்.

இனிப் பிள்ளைகள் அறிந்துள்ள சொற்களைப் படங் களைக் கொண்டும் பொருள்களைக் கொண்டும் வருவித்த லோடு, முதன் முதலில், படிக்கும் பயிற்சி மட்டும் அளித் துப் பின்னர் எழுதும் பயிற்சி அளிப்பது தற்கால முறை யாகும். இங்ஙனம் முதலில் படிக்கும் பயிற்சி மட்டும் அளித்தலால் எழுத்துக்களின் வரிவடிவங்களைப் பற்றிய அறிவு பிள்ளைகளின் மனத்தில் ஊன்றிவிடும் என்பதும், அதன் பிறகு எழுதும் பயிற்சி அளிப்பின் பிள்ளைகள் எளிதாகவும் உற்சாகத்துடனும் பாடத்தைக் கற்றுக் கொள்வர் என்பதும் தற்காலப் புதியமுறையின் நோக்க மாகும்.

இப்புதிய முறைப்படியும் அரசியலார் வெளியிட்டுள்ள புதிய பாடதிட்டத்தை ஒட்டியும் இப் பைந்தமிழ் வாசகம் முதற் புத்தகம் எழுதப்பெற்றுள்ளது.

இப் புத்தகத்தில், பிள்ளைகள் பழக்கத்தில் வழங்கக் கூடிய சொற்களும் தொடர்களும் வாக்கியங்களுமே உபயோகிக்கப்பட் டுள்ளன; சிறுவர் சிறுமியரின் மனத்தைக் கவரக்கூடிய சித்திரப் படங்கள் நிரம்ப அமைந்துள்ளன; எழுத்து நிரப்புதல், படம் பார்த்துப் படித்தல், அட்டை எழுத்துக்களைக்கொண்டு சொற்களை ஆக்குதல் முதலிய பயிற்சிகள் பயன்படத்தக்க முறையில் படிப்படியாக வேண்டிய அளவு கொடுக்கப்பட்டுள்ளன; இன்னும், பிள்ளைகளுக்குக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் உண்டாகும் வண்ணம் வேடிக்கைச் செய்தியும் பாட்டும் உரையாடலும் அமைக்கப் பெற்றுள்ளன.

இப்புத்தகத்தைக் கல்வி இலாகா அதிகாரிகளும் பள்ளிக்கூடத் தலைவர்களும் ஆரம்ப ஆசிரியர்களும் ஏற்றுப் போற்றி ஆதரிப்பார்கள் என்று நம்புகின்றேன்.

இங்ஙனம்,

ம. பெரியசாமிப் பிள்ளை.

முதல் வகுப்பிற் குரியது




# அம்மா அப்பா
# பாப்பா



ஆடு



ஆமை



இறகு



இலை



ஈக்கள்



ஈட்டி



உரல்



உறி



ஊசி



ஊதல்



எலி



எருமை



ஏணி



ஏற்றம்



ஐவர்



ஐயர்



ஒட்டகம்

1

ஒன்று



ஒ௵ன்



ஓடுகள்



ஔவை



கலயம்



சக்கரம்



சங்கு



மாங்காய்



சட்டி



தச்சர்



மஞ்சள்



ஊஞ்சல்



குடம்



கட்டில்



கிணறு



வண்டு



தவளை



வாத்து



நண்டு



பந்து



பசு



காப்பு



மயில்



மரம்



யானை



நாய்



உரல்



ஏர்



கலசம்




அணில்



வண்டி



அவ்வை



பழம்



சிமிழ்



குளம்



தேள்



முறம்



நாற்காலி



கூனன்



கன்று



கண்



கால்



கிளி



கீரி



குடை



கூடை



கெண்டி



கேணி



கைகள்



கொக்கு



கோழி



கௌதாரி

2700—3

## அட்டை எழுத்துக்களைக் கொண்டு பொருள்களின் பெயர்களை அமைத்தல்—I



# அட்டை எழுத்துக்களைக் கொண்டு பொருள்களின் பெயர்களை அமைத்தல்—II



# அட்டை எழுத்துக்களைக் கொண்டு சொற்களை ஆக்கும் விளையாட்டு—I



## அட்டை எழுத்துக்களைக் கொண்டு சொற்களை ஆக்கும் விளையாட்டு—II



படங்களைப் பார்த்து, கோடுள்ள இடங்களில் எழுத்துக்களை நிரப்பு.











| | | |
|---|---|---|
| காக் — | — ழி | வா — — |
| ம — ல் | பு — | — — கு |
| — ரு — | கி — | க — — |

# இவை என்ன?



கத்தரிக்காய் வெண்டைக்காய்
பூசணிக்காய் பரங்கிக்காய்
புடலங்காய் தேங்காய்
மாங்காய் பலாக்காய்
வாழைக்காய்

# இவை என்ன?



மாதுளம்பழம் மாம்பழம்
பலாப்பழம் வாழைப்பழம்
ஆரஞ்சுப்பழம் எலுமிச்சம்பழம்
கொய்யாப்பழம் நாவல்பழம்
விளாம்பழம்



குடை பிடி.



குடை விரி.



பாய் விரி.



கயிறு திரி.



பாடம் படி.



பாடம் எழுது.

2700—4



ஏர் உழு.

விதை தெளி.

நாற்று நடு.

கதிர் அறு.

போர் அடி.

நெல் அள.



புழு ஊரும்.



பூச்சி பறக்கும்.



பாம்பு சீறும்.



கோழி முட்டை
இடும்.



தராசு நிறுக்க
உதவும்.



ஊசி நூல் தைக்க
உதவும்.



இவன் கூலிக்காரன்.
இவன் கைவண்டி
இழுக்கிறான்.



இந்த நாய் என்ன
செய்கிறது?
இந்த நாய் எலும்பு
கடிக்கிறது.



இவன் பலூன் ஊது
கிறான்.
இந்தப் பலூன்
ரப்பர் பலூன்



இவர் தாத்தா.
தாத்தா கோல் ஊன்றி
நடப்பார்.



இவர் எங்கள் பாட்டி.
எங்கள் பாட்டி கதை
சொல்வார்.



இவர்கள் அக்கா, தங்கை.
தங்கை பெயர் செல்லம்.
அக்கா பெயர் கமலம்.



வாத்து நீரில் நீந்தும்.
வாத்தின் உடம்பில்
நீர் ஒட்டாது.



இவன் நுங்கு
சீவுகிறான்.
நுங்கு இனிப்பாய்
இருக்கும்.



இது ஒரு பசு.
இந்தப் பசு தண்ணீர்
குடிக்கிறது.



தயிரோ ! தயிர்.

என்ன தயிர் ?

ஆடைத் தயிர்.

என்ன ஆடை ?

பால் ஆடை.

என்ன பால் ?

எருமைப் பால்.

என்ன எருமை ?

காட்டு எருமை.



சூரியன் கிழக்கில்
உதிக்கும்.
சூரியன் மேற்கில்
மறையும்.
நடுப்பகலில்
சூரியன் எங்கே
தெரியும்?



கிணற்றில் நீர்
ஊறும்.
கிணற்று நீர்
சுத்தமானது
இறைக்க இறைக்க
நீர் ஊறும்.



யானை பெரிய மிருகம்.
யானை புல் தின்னும்.
யானை காட்டில்
வசிக்கும்.

எறும்பு சிறிய பிராணி.
எறும்பு புற்றில்
வசிக்கும்.
எறும்பு ஊர்ந்து
செல்லும்.





மான் அழகான
மிருகம்.
மான் காட்டில்
வசிக்கும்.
மான் வேகமாய் ஓடும்.

படத்தைப் பார்த்துக் கோடுள்ள இடங்களை நிரப்பு—I

| | |
|---|---|
|  | —எலி பிடிக்கும். |
|  | —பொதி சுமக்கும். |
|  | —வீட்டைக் காக்கும். |
|  | —வேகமாய் ஓடும். |
|  | —ஊளை இடும். |
|  | —பால் தரும். |

படத்தைப் பார்த்துக் கோடுள்ள இடங்களை நிரப்பு—II

| | |
|---|---|
| | —தழைகளைத் தின்னும். |
| | —புல் மேயும். |
| | —மரத்தில் வசிக்கும். |
| | —காட்டில் வாழும். |
| | —வண்டி இழுக்கும். |



குரங்கு எங்கே
இருக்கிறது ?

குரங்கு மரத்தின் மேல்
இருக்கிறது.

ஆள் எங்கே நிற்கிருன்?

ஆள் மரத்தின் கீழ்
நிற்கிருன்.

படுக்கை எங்கே
இருக்கிறது ?

படுக்கை கட்டிலின்
மேல் இருக்கிறது.

பூனே எங்கே
இருக்கிறது ?

பூனே கட்டிலின் கீழ்
இருக்கிறது.





குழந்தை எங்கே
இருக்கிறது ?

குழந்தை வீட்டின்
உள்ளே இருக்கிறது.

தாய் எங்கே
இருக்கிருள் ?

தாய் வீட்டின் வெளியே
இருக்கிருள்.

எலி எங்கே இருக்கிறது ?

எலி கூண்டின்
உள்ளே இருக்
கிறது.



பூனை எங்கே
இருக்கிறது ?

பூனை கூண்டிற்கு
வெளியே இருக்கிறது.

பொன்னன் வருகிறான்.

கண்ணன் வருகிறான்.

பொன்னனும் கண்ணனும்
வருகிறார்கள்.

அண்ணன் எங்கே சென்றான்?

தம்பி எங்கே சென்றான்?

அண்ணனும் தம்பியும் எங்கே
சென்றார்கள்?

ஆடு மேய்கிறது.

மாடு மேய்கிறது.

ஆடுமாடுகள் மேய்கின்றன.

குதிரை ஓடுகிறது.

குதிரைகள் ஓடுகின்றன.



## இலைகள்

இவை என்ன இலைகள் ?

இலைகளின் நிறம் என்ன ?

இலைகளில் பெரியது எது ?

தாமரை இலை என்ன வடிவம் ?

உனக்கு வேறு என்ன இலை தெரியும் ?



## வாழை மரம்

இது ஒரு வாழை மரம்.

வாழை மரத்தில் கிளைகள் இல்லை.

வாழை இலை மிகவும் பெரியது.

வாழை இலையில் சாப்பிடலாம்.

வாழைப் பழம் இனிப்பாய் இருக்கும்.




# மாங்கன்று

தாதா, தாதா, என்ன செய்கிறீர்?

நான் மாங்கன்று நடுகிறேன்.

கன்று வளர்ந்து மாமரம் ஆகும்.

மாமரம் மாசி மாதம் பூ பூக்கும்.

பூவிலிருந்து பிஞ்சு தோன்றும்.

பிஞ்சு முற்றிக் காய் ஆகும்.

மாங்காய் பழுத்து மாம்பழம் ஆகும்.




# தவளை

தவளை நீரில் வசிக்கும்.

தவளை நிலத்திலும் வசிக்கும்.

தவளை முட்டை இடும்.

தவளை பூச்சியைத் தின்னும்.



# நான்

மரங்களில் வசிப்பேன்.

கிளைக்குக் கிளை தாவுவேன்.

கனிகளைத் தின்பேன்.

பல்லை இளித்துக் காட்டுவேன்.

கிட்ட வந்தால் உன்னை 'உர்' என்று மிரட்டுவேன்.

என் பெயரைச் சொல்லு.



# பள்ளிக்கூடம்

இது ஒரு பள்ளிக்கூடம்.

உபாத்தியாயர் என்ன செய்கிறார்?

உபாத்தியாயர் பாடம் கற்பிக்கிறார்.

பிள்ளைகள் என்ன செய்கிறார்கள்?

பிள்ளைகள் பாடம் கேட்கிறார்கள்.




# தபாற்காரரர்

தம்பி: அண்ணு, இவர் யார்?

அண்ணன்: தம்பி, இவர் தபாற் காரரர்.

தம்பி: தபாற்காரரர் என்ன தந்தார்?

அண்ணன்: தபாற்காரரர் கடிதம் தந்தார்.



# இராட்டினம்

பருத்தியிலிருந்து கொட்டையை எடு.

பஞ்சை நல்ல பட்டை போடு.

இராட்டினம் நூல் நூற்க உதவும்.

இந்த நூலால் ஆடை நெய்யலாம்.

அந்த ஆடை கதர் எனப்படும்.

கதர் ஆடை உடுத்துவது நல்லது.



# ஏர்

(பாட்டு)

ஏர்பிடித்து உழுதவர்கள்
என்றுமுயிர் காப்பார்.
ஊரிலவர் பெரியவர்கள்
உரிமையுடன் வாழ்வார்.
பாடுபட்டு உழுதவர்கள்
பசியின்றி வாழ்வார்.
நாடுகொண்ட பசிப் பிணியை
நலமுடனே தீர்ப்பார்.

# நல்லொழுக்க விதிகள்

1. காலையில் எழுந்திரு.
2. கடவுளை வணங்கு.
3. தினமும் குளி.
4. சுத்த ஆடை கட்டு.
5. பெற்றோர் சொற்கேள்.
6. வேளையில் உண்.
7. கல்வியை விரும்பு.
8. குருமொழி கொள்.
9. மிதமாய் விளையாடு.
10. உண்மையே பேசு.
11. நல்லோர் சிநேகம் செய்.

தமிழ்

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ |
|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ |
| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ |
| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ |
| ட | டா | டி | டீ | டு | டூ | டெ |
| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ |
| ய | யா | யி | யீ | யு | யூ | யெ |
| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ |
| ல | லா | லி | லீ | லு | லூ | லெ |
| வ | வா | வி | வீ | வு | வூ | வெ |
| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ |
| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ |
| ற | றா | றி | றீ | று | றூ | றெ |
| ன | னா | னி | னீ | னு | னூ | னெ |

எழுத்துக்கள்

| ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
|---|---|---|---|---|---|
| கே | கை | கொ | கோ | கௌ | க் |
| ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ | ங் |
| சே | சை | சொ | சோ | சௌ | ச் |
| ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ | ஞ் |
| டே | டை | டொ | டோ | டௌ | ட் |
| ணே | ணை | ணொ | ணோ | ணௌ | ண் |
| தே | தை | தொ | தோ | தௌ | த் |
| நே | நை | நொ | நோ | நௌ | ந் |
| பே | பை | பொ | போ | பௌ | ப் |
| மே | மை | மொ | மோ | மௌ | ம் |
| யே | யை | யொ | யோ | யௌ | ய் |
| ரே | ரை | ரொ | ரோ | ரௌ | ர் |
| லே | லை | லொ | லோ | லௌ | ல் |
| வே | வை | வொ | வோ | வௌ | வ் |
| ழே | ழை | ழொ | ழோ | ழௌ | ழ் |
| ளே | ளை | ளொ | ளோ | ளௌ | ள் |
| றே | றை | றொ | றோ | றௌ | ற் |
| னே | னை | னொ | னோ | னௌ | ன் |



# நிலாப் பாட்டு

நிலா நிலா வாவா
நில்லாமல் ஓடிவா
மலைமேலே ஏறிவா
மல்லிகைப்பூ கொண்டுவா
நடு வீட்டில் வையே
நல்ல துதி செய்யே.

அ

அம்மா
அப்பா
அணில்
அவ்வை
அக்கா
அடிக்கிறான்
அண்ணன்
அழகான

ஆ

ஆடு
ஆமை
ஆடை
ஆரஞ்சுப்பழம்

இ

இராட்டினம்
இறகு
இலை
இவன்
இவள்
இவர்
இவர்கள்
இடும்
இழுக்கிறான்
இந்த
இல்லை
இனிப்பாய்
இருக்கும்
இது
இறைந்த
இவை

ஈ

ஈக்கள்
ஈட்டி

உ

உரல்
உறி
உதவும்
உடம்பில்
உள்ளது
உதிக்கும்
உனக்கு
உள்ளே
உழவன்
உழுகிறான்
'உர்'
உன்னை
உண்டு
உபாத்தியாயர்
உண்
உண்மை
உடுத்து
உழுதவர்

ஊ

ஊசி
ஊதல்
ஊஞ்சல்
ஊன்றி
ஊரும்
ஊதுகிறான்
ஊறும்
ஊளை

எ

எலி
எருமை
எங்கள்
என்ன
எலும்பு
எறும்பு
எங்கே
எது
எலுமிச்சம்பழம்
என்று
என்
எழுந்திரு

ஏ

ஏணி
ஏற்றம்
ஏர்

ஐ

ஐவர்
ஐயர்

ஒ

ஒட்டகம்
ஒன்று
ஒரு

ஓ

ஓணான்
ஓடுகள்
ஓடுகிறான்

ஔ

ஔவை

க

கலயம்
குடம்
கட்டில்
கிணறு
காப்பு
கலசம்
குளம்
கூனன்
கன்று
கிளி
கீரி
குடை
கெண்டி
கேணி
கைகள்
கொக்கு
கோழி
கௌதாரி
கால்
காய்
கிழவன்
கிழவி
கோல்
கதை
கமலம்
காடு
கடிதம்
கூலிக்காரன்
கைவண்டி
கடிக்கிறது
காது
குடிக்கிறது
கிழக்கில்
கிளைகள்
கழுகு
காக்கும்
குரங்கு
கீழ்
குழந்தை
கூண்டின்
கண்ணன்
குதிரைகள்
கறக்கிறான்
கடைகிறான்
கழுதை
குயவன்
கனிகளை
காட்டுவேன்
கிட்ட
கண்
கற்பிக்கிறார்
கேட்கிறார்கள்
காலையில்
கடவுளை
குளி
கட்டு
கல்வியை
குருமொழி
கொள்
காந்தி
கத்தரிக்காய்
கதர் கொட்டை

ச

சக்கரம்
சங்கு
சட்டி
சிமிழ்
சால்
சொல்வார்
செல்லம்
சீறும்
செய்கிறது
சீவுகிறான்
சுறுசுறுப்பு
சூரியன்
சுத்தமானது
சாப்பிடலாம்
சிறிய
செல்லும்
சென்றான்

சென்ருர்கள்
சட்டை
சோறு
சொல்லு

த

தச்சர்
தவளை
தேள்
தாய்
தாத்தா
தங்கை
தயிர்
தம்பி
தபாற்காரர்
தந்தார்
தராசு
தண்ணீர்
தெரியும்
தின்னும்
தாமரை
தரும்
துணி
தாவுவேன்
தலை
தினமும்
தீர்ப்பார்

ந

நாய்
நண்டு
நாற்காலி
நடப்பார்
நல்ல
நிற்கிருன்
நிறுக்க
நூல்
நீரில்
நீந்தும்
நுங்கு
நடுப்பகலில்
நிலத்திலும்
நிறம்
நிற்கிருர்கள்
நிற்கிருர்
நிற்கிறது
நிற்கின்றன
நாக்கு
நல்லொழுக்கம்
நல்லோர்
நாள்
நெய்யலாம்

ப

பாப்பா
பந்து
பசு
பழங்கள்
பூனை
பால்
பாய்
பையன்
பெண்
பாட்டி
பெயர்
பழுத்து
பூக்கும்
பாடுபடு
பசி
பிணி
புழு
பூச்சி
பறக்கும்
பாம்பு
பலூன்
புற்றில்
பெரியது
புரு
பலாப்பழம்
படுக்கை
பொன்னன்
பானை
பள்ளிக்கூடம்
பாடம்
பிள்ளைகள்
பெற்ருேர்
பூசணிக்காய்
பலாக்காய்
பரங்கிக்காய்
பஞ்சு
பட்டை

பருத்தி
பெரியவர்

ம

மாங்காய்
மஞ்சள்
மயில்
மரம்
முறம்
மணி
முட்டை
மேற்கில்
மறையும்
மிகவும்
மயில்
மாம்பழம்
மாதுளம்பழம்
மிருகம்
மான்
மேய்கிறது
மாடு
மிரட்டுவேன்
மூக்கு
மிதமாய்
மாங்கன்று
மாசி
மாதம்
மாமரம்
முற்றி

ய

யானை
யார்

ர

ரப்பர்

வ

வண்டு
வாத்து
வண்டி
வால்
வாய்
வசிக்கும்
வெள்ளியால்
வாழைமரம்
வேறு
விளாம்பழம்
வீட்டை
வெளியே
வருகிறான்
வருகிறார்கள்
வந்தால்
விரல்கள்
விதிகள்
வணங்கு
வேலையில்
விரும்பு
விளையாடு

# பைந்தமிழ் வாசகம்

## இரண்டாம் வகுப்பிற் குரியது

[புதிய பாடதிட்டத்தை ஒட்டி எழுதப்பட்டுள்ளது]

ஆசிரியர் :
வித்வான் ம. பெரியசாமிப் பிள்ளை
முன்னைய தலைமைத் தமிழாசிரியர், E. R. உயர்நிலைப்பள்ளி,
திருச்சிராப்பள்ளி



T. G. கோபால் பிள்ளை
பதிப்பாளர்

தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி | 2/27, பிராட்வே ஜி. டி., சென்னை

பதிப்புரிமை] 1954 [விலை அணா 6

# முன்னுரை

ஒவ்வொரு நாட்டினரும் தமது தாய்மொழியைப் போற்றிப் பயிலவேண்டுவது இன்றியமையாத கடமையாகும். அதுபற்றியே நமது அரசியலாரும் ஆரம்ப பாடசாலைகளில் தாய்மொழிப் பயிற்சியை முதன்மையான பாடமாகவும் கட்டாய பாடமாகவும் அமைத்துள்ளார். நமது தாய்மொழியாகிய தமிழ் ஒரு இனிய மொழி. தமிழில், ஆரம்ப பாடசாலைப் பாட புத்தகங்கள் பல வெளிவந்துள்ளன வாயினும், தமிழ் வளர்ச்சி கருதி மாணவர்க்குப் பயன்படும் வகையில் எத்தனை புத்தகங்கள் வெளிவரினும் நலமே. ஆதலின், '**பைந்தமிழ் வாசகம்**' என்னும் பெயரால் இப் புதிய பாட புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

இப் புத்தகங்களிலுள்ள பாடங்கள் வகுப்புக்கேற்ற வண்ணமும், மாணவர்கள் மேலும் மேலும் புதிய சொற்களைக் கற்பதற்கேற்றவாறும் அமைக்கப்பட்டுள்ளன. மொழிப் பயிற்சியைத் தருதலே பாட புத்தகத்தின் முக்கிய நோக்கமாதலின், அதற்குத் தக்கவாறு பயிற்சிகளும் கேள்விகளும் தரப்பெற்றுள்ளன. மூன்று, நான்கு, ஐந்தாம் வகுப்புக்களில் அரும்பதவுரை கொடுக்கப்பட்டிருத்தலோடு அந்தந்த வகுப்புக்கேற்ற அளவு எளிய முறையில் பாட சம்பந்தமான உதாரணங்களைக்கொண்டு இலக்கண

விதிகள் விளக்கிக் காட்டப்பட்டுள்ளன. மாணவர்களுக்குச் சுவை பயக்கும் வகையில் அமைந்துள்ள கதைப் பாட்டுக்களும் உரையாடலும் அங்கங்கே வேண்டிய அளவு தரப்பட்டுள்ளன.

கல்வி இலாகா அதிகாரிகளும் கல்விச்சாலை யாசிரியரும் இப்புத்தகங்களைத் தங்கள் கல்விச்சாலைகளில் பாட புத்தகமாக வைத்து ஆதரிப்பார்களென்று நம்புகின்றேன்.

ம. பெரியசாமிப் பிள்ளை.

# பொருளடக்கம்

# இரண்டாம் வகுப்பிற் குரியது




## 1. எங்கள் குடும்பம்

1. இவர் என் தகப்பனார்.
2. தகப்பனார் பணம் சம்பாதித்து வருகிறார்.
3. எனக்குப் புத்தகங்களை வாங்கித் தருகிறார்.
4. அவர் என் தாயார்.
5. தாயார் எனக்குச் சாப்பாடு போடுகிறார்.
6. அவள் என் தங்கை.
7. நாங்கள் சேர்ந்து படிப்போம்.
8. எங்கள் குடும்பம் சிறிய குடும்பம்.

| | | |
|---|---|---|
| தகப்பனார் | சாப்பாடு | சம்பாதித்து |
| தாயார் | சேர்ந்து | பணம் |
| | குடும்பம் | |



# 2. எங்கள் வீடு

1. நாங்கள் பெரிய வீட்டில் வசிக்கிறோம்.
2. எங்கள் வீட்டில் பல அறைகள் உண்டு.
3. முன் புறத்தில் நான் படிக்கும் அறை இருக்கிறது.
4. என் அறையில் இரண்டு சன்னல்கள் இருக்கின்றன.
5. சன்னல்கள் வழியே காற்று நன்றாய் வீசும்.
6. எனக்கு ஒரு தனி மேசை இருக்கிறது.

7. மேசையில் என் புத்தகங்களை வைத்திருக்கிறேன்.
8. வீட்டின் பின்புறம் ஒரு கிணறு இருக்கிறது.
9. கிணற்று நீரைத் தோட்டத்துக்கு இறைப்பேன்.

| | | |
|---|---|---|
| முன்புறம் | வீசும் | காற்று |
| நன்ருய் | தோட்டம் | தனி |
| பின்புறம் | இறைப்பேன் | |



## 3. எங்கள் ஊர்

1. எங்கள் ஊர் ஒரு பெரிய கிராமம்.
2. ஊரில் பல தெருக்கள் இருக்கின்றன.
3. ஊரைச் சுற்றி வயல்கள் இருக்கின்றன.
4. வயல்களுக்கு மேற்கே ஓர் ஏரி உண்டு.
5. ஏரி நீர் வயல்களுக்குப் பாயும்.
6. ஊரின் நடுவில் ஒரு கோயில் இருக்கிறது.
7. கோயிலுக்கு எதிரில் ஒரு குளம். இருக்கிறது.
8. எங்கள் ஊரில் பள்ளிக்கூடம் இருக்கிறது.

| | | |
|---|---|---|
| கிராமம் | தெரு | ஏரி |
| நடு | பள்ளிக்கூடம் | சுற்றி |




## 4. எங்கள் பள்ளிக்கூடம்

1. இது எங்கள் பள்ளிக்கூடம்.
2. எங்கள் பள்ளிக்கூடம் பெரியது.
3. இதில் ஐந்து வகுப்புகள் உண்டு.
4. நான் இரண்டாம் வகுப்பில் படிக்கிறேன்.
5. காலையில் நாங்கள் பள்ளிக்கூடம் போவோம்.
6. ஆசிரியர் எங்களுக்குப் பாடம் சொல்வார்.
7. நாங்கள் நன்றாகப் பாடம் படிப்போம்.
8. மாலையில் நாங்கள் வீடு செல்வோம்.

| | | | |
|---|---|---|---|
| காலை | மாலை | போவோம் | ஆசிரியர் |
| வகுப்பு | பாடம் | செல்வோம் | பள்ளிக்கூடம் |



# 5. பூக்கள்

1. இதில் உள்ள பூக்கள் எத்தனை ?
2. இவற்றில் ஒன்று மலர்ந்த பூ.
3. இன்னொன்று இப்பொழுது மலர்கின்ற பூ.
4. மற்றொன்று மலராத பூ.
5. மலராத பூ அரும்பு; மலர்ந்த பூ மலர்.
6. மலர்கின்ற பூவுக்குப் போது என்று பெயர்.
7. அரும்புக்கு மொட்டு என்றும் பெயர்.
8. பூ அழகும் மணமும் உள்ளது.
9. அதனால் பூவை யாவரும் விரும்புவார்.

10. பூவில் இனிய தேன் உண்டு.
11. வண்டுகள் தேனை உண்டு பாடும்.
12. உனக்குத் தெரிந்த பூக்கள் எவை?

| | | |
|---|---|---|
| தேன் | இனிய | இவற்றில் |
| மலர் | அரும்பு | மற்றொன்று |
| போது | மலர்ந்த | வண்டுகள் |
| அழகு | பாடும் | இப்பொழுது |
| உண்டு | தெரிந்த | விரும்புவார் |
| மணம் | யாவரும் | |

### பயிற்சி

இந்தப் பூக்களின் பெயர்களைச் சொல்லு :





### கேள்விகள்

1. எதற்கு அரும்பு என்று பெயர் ?
2. போது என்று எதற்குப் பெயர் ?
3. பூவிலிருந்து கிடைக்கும் இனிய பொருள் யாது ?

# 6. நிறங்கள்

1. மல்லிகைப் பூ வெள்ளை நிறம்.
2. ரோசாப் பூ சிவப்பு நிறம்.
3. செவ்வந்திப் பூ மஞ்சள் நிறம்.
4. வெற்றிலை பச்சை நிறம்.
5. காக்கை கறுப்பு நிறம்.
6. இப்பொழுது கூறிய நிறங்கள் எவை ?
7. இந்த நிறங்கள் ஐந்தும் பஞ்சவர்ணம் என்று கூறப்படும்.
8. இன்னும் வேறு நிறங்களும் உண்டு.
9. அவை நீலம், ஊதா, பழுப்பு.
10. வானம் நீல நிறமானது.
11. அவரைப் பூவில் ஊதா நிறம் உண்டு.
12. வெல்லம் பழுப்பு நிறம் உள்ளது.

| | | |
|---|---|---|
| நீலம் | மஞ்சள் | கறுப்பு |
| ஊதா | அவரை | வெள்ளை |
| பச்சை | வெல்லம் | வெற்றிலை |
| சிவப்பு | இன்னும் | மல்லிகை |
| ரோசா | வானம் | செவ்வந்தி |
| கூறிய | பழுப்பு | பஞ்சவர்ணம் |

## பயிற்சி

I. தருந்த சொற்களால் பின்வரும் கட்டத்தை நிரப்பு :

| பொருள்கள் | நிறம் |
|---|---|
| இரத்தம் | ______ |
| ______ | பச்சை |
| பால் | ______ |
| புல் | ______ |
| ______ | மஞ்சள் |

II. முதல் வரிசையிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும் பொருத்தமான நிறத்தை இரண்டாம் வரிசையிலிருந்து எடுத்துச் சேர்த்துப்படி :

| பொருள் | நிறம் |
|---|---|
| மிளகாய்ப்பழம் | மஞ்சள் |
| எலுமிச்சம்பழம் | வெள்ளை |
| மிளகு | பச்சை |
| வாழைத்தண்டு | சிவப்பு |
| வாழை இலை | கறுப்பு |

## கேள்விகள்

1. பஞ்சவர்ணம் எவை ?
2. வானம் என்ன நிறம் ? வெற்றிலை என்ன நிறம் ?
3. மஞ்சள் நிறமான பூக்கள் இரண்டு சொல்லு.



# 7. பழங்கள்

1. இந்தப் படத்திலுள்ள பழங்களைப் பார்.
2. இவைகளில் பெரிது பலாப்பழம்.
3. இன்னொன்று மாம்பழம்.
4. மற்றொன்று வாழைப் பழம்.
5. இவற்றிற்கு முப்பழம் அல்லது முக்கனி என்று பெயர்.
6. ஆரஞ்சு, மாதுளை, கொய்யா, திராட்சை இவை வேறு சில பழங்கள்.
7. இந்தப் பழங்கள் தித்திப்பா யிருக்கும்.
8. வேறு சில பழங்கள் புளிக்கும்.
9. புளியம்பழம், எலுமிச்சம்பழம் இவை புளிப்பான பழங்கள்.

| | | |
|---|---|---|
| முப்பழம் | பலாப்பழம் | ஆரஞ்சு |
| மாதுளை | கொய்யா | தித்திப்பு |

**கேள்விகள்**

1. வேறு நான்கு பழங்களைச் சொல்லு.
2. முப்பழங்கள் எவை ?

## 8. சுவைகள்

1. கரும்பு இனிப்பாய் இருக்கும்.
2. எலுமிச்சம் பழம் புளிப்பாய் இருக்கும்.
3. வாழைக்காய் துவர்ப்பாய் இருக்கும்.
4. உப்பு உவர்ப்பாய் இருக்கும்.
5. பாகற்காய் கசப்பாய் இருக்கும்.
6. மிளகாய் காரமாய் இருக்கும்.
8. இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, கசப்பு, கார்ப்பு என்பன சுவைகள்.
8. இந்த ஆறு சுவைகளும் அறுசுவை எனப்படும்.
9. நாம் நாவினுல் சுவை அறிகிறோம்.
10. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு சுவையில் பிரியம் அதிகம்.

| | | |
|---|---|---|
| காரம் | மிகுந்த | விருப்பம் |
| உப்பு | உவர்ப்பு | அறிகிறோம் |
| துவர்ப்பு | அறுசுவை | பாகற்காய் |
| கசப்பு | ஒவ்வொரு | எலுமிச்சம்பழம் |

## பயிற்சி

I. கசக்கும், உவர்க்கும், புளிக்கும், துவர்க்கும், பாக்கு, வேப்பிலை, உப்பு, புளி—இச்சொற்களைப் பின் கண்ட கட்டங்களில் பொருத்தமாக எழுது.

| பொருள்கள் | சுவைகள் |
|---|---|
| | |

II. கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களைச் சேர்த்துப் படி :

1. ——— துவர்ப்பாய் இருக்கும்.
2. மிளகு ——— இருக்கும்.
3. வேப்பங்காய் ——— இருக்கும்.
4. ——— இனிப்பாய் இருக்கும்.

## கேள்விகள்

1. அறு சுவைகள் எவை ?
2. உனக்கு எந்தச் சுவையில் பிரியம் அதிகம் ?
3. இனிக்கும் பொருள்கள் மூன்று சொல்லு.
4. புளிக்கும் பழங்கள் மூன்று சொல்லு.

# 9. பூனைக்கு மணி கட்டுவது யார்?

## படப் பயிற்சி—1

ஒவ்வொரு படத்தையும் வரிசையாகப் பார்த்து ஒன்றிரண்டு வாக்கியங்கள் எழுது. பிறகு 'பூனைக்கு மணி கட்டுவது யார்?' என்ற கதையைச் சொல்லு.





## 10. கிளி

1. இது ஒரு கிளி.
2. கிளி மிகவும் அழகான பறவை.
3. கிளிகளைச் சிலர் வளர்ப்பார்கள்.
4. கிளியைக் கிளிப்பிள்ளை என்று சொல்வது உண்டு.
5. கிளிக்குப் பேச்சுக் கற்றுக் கொடுக்கலாம்.
6. அது நாம் சொன்னதைத் திருப்பிச் சொல்லும்.
7. கிளி தன் அலகினால் பழங்களைக் கொத்தித் தின்னும்; கொட்டைகளை உடைக்கும்.
8. நாம் அடிக்கடி பார்ப்பது பச்சைக் கிளி.

9. வேறு நிறமுள்ள கிளிகளும் உண்டு.
10. அவை வெள்ளைக் கிளி, சிவப்புக் கிளி, கருங்கிளி, பஞ்சவர்ணக் கிளி.

| | | |
|---|---|---|
| சிலர் | மிகவும் | உடைக்கும் |
| அலகு | கொத்தி | கிளிப்பிள்ளை |
| பேச்சு | கொட்டை | கற்றுக்கொடு |
| பறவை | அடிக்கடி | வளர்ப்பார்கள் |

## பயிற்சி

படத்தைப் பார்த்து விடை கூறு :

1. படத்தில் நீ என்னென்ன பார்க்கிறாய்?
2. கிளி எங்கே உட்கார்ந் திருக்கிறது?
3. கிளியின் அலகு எப்படி இருக்கிறது?

## கேள்விகள்

1. கிளிகளில் என்னென்ன நிறமுள்ள கிளிகள் உண்டு?
2. கிளியின் ஆகாரம் என்ன?
3. பேசக் கற்றுக்கொடுத்தால் கிளி எப்படிப் பேசும்?



## 11. சூரியன்

1. சூரியன் வானத்தில் தோன்றும் நெருப்பு உருண்டை.
2. சூரியன் காலையில் எழும்; மாலையில் மறையும்.
3. சூரியன் எழுதல் சூரிய உதயம்.
4. சூரியன் மறைதல் சூரிய அத்தமனம்.
5. சூரியன் நடுப்பகலில் வானத்தின் உச்சியில் இருக்கும்.
6. சூரியன் நமக்கு வெளிச்சமும், வெப்பமும் கொடுக்கிறது.
7. சூரிய வெப்பத்துக்கு வெயில் என்று பெயர்.

8. சூரிய வெளிச்சம் உள்ள நேரம் பகல்.
9. சூரிய வெளிச்சம் இல்லாத நேரம் இரவு.
10. பகலும் இரவும் சேர்ந்தது ஒரு நாள்.

| | | |
|---|---|---|
| வெப்பம் | நெருப்பு | அத்தமனம் |
| உருண்டை | உச்சியில் | மறையும் |
| உதயம் | நடுப்பகல் | |

**பயிற்சி**

கோடு உள்ள இடங்களை நிரப்பு :

1. சூரியன் மேற்கில் ———.
2. சூரியன் ——— உதிக்கும்.
3. சூரிய வெளிச்சம் இல்லாத நேரம் ———.
4. சூரிய வெளிச்சம் ——— நேரம் பகல்.

**கேள்விகள்**

1. சூரியன் நமக்கு என்னென்ன கொடுக்கிறது ?
2. சூரியன் தோன்ருவிட்டால் என்ன ஏற்படும் ?




## 12. திசைகள்

1. சூரியன் உதிக்கும் பக்கம் கிழக்கு.
2. சூரியன் மறையும் பக்கம் மேற்கு.
3. காலையில் சூரியனைப் பார்த்து நில்.
4. நீ கிழக்குப் பக்கம் பார்த்து நிற்கிறாய்.
5. இப்பொழுது உன் கைகளை இரு பக்கங்களிலும் நேராக நீட்டு.
6. உன் வலது கைப் பக்கம் தெற்கு.
7. உன் இடது கைப் பக்கம் வடக்கு.
8. உன் பின்பக்கம் மேற்கு.

9. கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு என்ற நான்கு பக்கங்களும் திசைகள் எனப் படும்.

10. உன் வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் எந்தத் திசையில் இருக்கிறது?

| | | |
|---|---|---|
| திசை | கிழக்கு | வலது கை |
| நீட்டு | மேற்கு | இடது கை |
| பக்கம் | தெற்கு | வடக்கு |

### பயிற்சி

படத்தைப் பார்த்துப் பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி.

1. சூரியன் கிழக்கே ———.
2. ஒரு ——— ——— முகமாக நிற்கிறான்.
3. அவன் தன் இரண்டு ——— ——— ———.
4. அவனுக்கு ——— ——— தெற்கு.
5. ——— இடது கைப்புறம் ———.
6. அவன் முதுகுப்புறம் ———.

### கேள்விகள்

1. திசைகள் எத்தனை?
2. அவற்றின் பெயர் என்ன?
3. சூரியன் அத்தமிக்கும் திசை எது?



## 13. சந்திரன்

1. சந்திரன் இரவில் வெளிச்சம் தரும்.
2. எல்லா நாட்களிலும் சந்திரன் வட்டமாக இராது.
3. மாதம் ஒரு நாள் சந்திரன் முழு வட்ட மாக இருக்கும்.
4. அன்று பௌர்ணமி எனப்படும்.
5. சந்திரன் அரை வட்டமாக இருக்கும் நாள் அட்டமி.
6. மாதம் ஒரு நாள் சந்திரனைக் காண முடியாது.
7. அன்று அமாவாசை எனப்படும்.

8. சந்திரனுக்கு நிலா என்றும் ஒரு பெயர் உண்டு.
9. அமாவாசை முதல் பௌர்ணமி வரை சந்திரன் வளர்ச்சி அடையும்.
10. இந்தக் காலம் வளர்பிறை.
11. பௌர்ணமி முதல் அமாவாசை வரை சந்திரன் குறையும்.
12. இந்தக் காலம் தேய்பிறை.

| | | |
|---|---|---|
| பௌர்ணமி | அட்டமி | அமாவாசை |
| வளர்ச்சி | வளர்பிறை | காலம் |
| குறையும் | தேய்பிறை | முடியாது |

**பயிற்சி**

பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி :—

1. சந்திரன் ——— வெளிச்சம் தரும்.
2. அமாவாசையன்று சந்திரனைக் காண ———.
3. சந்திரன் வளர்ச்சி அடையும் காலம் —— பிறை.

**கேள்விகள்**

1. .சந்திரன் ஏந்த நாளில் அரை வட்டமாகத் தோன்றும் ?
2. சந்திரனுக்கு உள்ள வேறு பெயர் என்ன ?
3. தேய்பிறைக் காலத்தில் சந்திரன் எவ்வாறு தோன்றும் ?

# 14. காலைப் பாட்டு



பொழுது விடிந்தது
  பொற்கோழி கூவிற்று
பூஞ்செடி பொலிவதைப்
  பாராய்
பொன்னே நீ
  எழுந்தோடி வாராய். 1

காகம் கரைந்தது
  காலையும் ஆயிற்று
கனியுதிர் காவினைப்
  பாராய்
கண்ணே நீ
  எழுந்தோடி வாராய். 2

—தேசிக விநாயகம் பிள்ளை

## 15. கிழமைகள்

1. ஒரு பகலும் ஓர் இரவும் சேர்ந்தது ஒரு நாள்.
2. ஏழு நாட்கள் கொண்டது ஒரு வாரம்.
3. வாரத்தின் ஏழு நாட்களுக்கும் பெயர்கள் உண்டு.
4. அவை ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி.
5. வாரத்தின் முதல் நாள் ஞாயிற்றுக் கிழமை.
6. வாரத்தின் கடைசி நாள் சனிக்கிழமை.
7. ஞாயிற்றுக்கிழமை நீங்கள் பள்ளிக்கூடம் போகமாட்டீர்கள் அல்லவா ?
8. அன்று பள்ளிக்கூடத்திற்கு விடுமுறை நாள்.
9. திங்கட்கிழமை முதல் ஐந்து அல்லது ஆறு நாட்கள் பள்ளிக்கூடத்தில் வேலை நடக்கும்.
10. ஒரு மாதத்திற்குச் சுமார் நான்கு வாரங்கள்.

| | | |
|---|---|---|
| வாரம் | கடைசி | அல்லவா |
| முதல் | மாட்டீர்கள் | விடுமுறை |

## பயிற்சி

முதல் வரிசையிலுள்ள ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான வார்த்தையை இரண்டாம் வரிசையிலிருந்து எடுத்துச் சேர்த்துப் படி :—

| | |
|---|---|
| வாரத்தின் முதல் நாள் | மாதம் |
| ஏழு நாட்கள் கொண்டது | ஞாயிறு |
| வாரத்தின் நடு நாள் | சனி |
| வாரத்தின் கடைசி நாள் | வாரம் |
| நான்கு வாரங்கள் | புதன் |

## கேள்விகள்

1. உன் பள்ளிக்கூடத்திற்கு எந்தக் கிழமைகள் விடுமுறை நாட்கள் ?

2. ஒரு நாள் என்பது என்ன ?

3. ஒரு மாதத்திற்கு முப்பது நாட்கள். ஒரு மாதத்தில் எத்தனை முழு வாரங்கள் இருக்கின்றன? எத்தனை நாட்கள் மீதி ?



## 16. தொழிலாளிகள்

1. மரவேலை செய்கிறவர் தச்சர்.
2. இரும்பு வேலை செய்கிறவர் கொல்லர்.
3. பாத்திரம் செய்கிறவர் கன்னார்.
4. வீடு கட்டுகிறவர் கொற்றர்.
5. துணிகளை வெளுக்கிறவர் சலவைத் தொழிலாளர்.
6. துணிகளைத் தைப்பவர் தையற்காரர்.
7. நகைகள் செய்பவர் தட்டார்.
8. ஆடை நெய்பவர் சேணியர்.
9. மண்பாண்டம் செய்பவர் குலாலர்.

10. செருப்புத் தைப்பவர் செம்மார்.
11. தொழில் செய்பவர் தொழிலாளி.
12. அதனால், இவர்களுக்குத் தொழிலாளிகள் என்று பெயர்.

| | | |
|---|---|---|
| நகை | செருப்பு | தைப்பவர் |
| ஆடை | தட்டார் | நெய்பவர் |
| வேலை | பாண்டம் | செம்மார் |
| தொழில் | கொல்லர் | தொழிலாளி |
| கன்னார் | சேணியர் | கட்டுகிறவர் |
| குலாலர் | கொற்றர் | சலவைத் தொழிலாளி |

### பயிற்சி

பொருத்தமாகச் சேர்த்துப் படி.

| | |
|---|---|
| 1. ஆடை நெய்பவர் | வீடு கட்டுவார். |
| 2. துணி வெளுக்கிறவர் | நகைகள் செய்வார். |
| 3. கொற்றர் | சலவைத் தொழிலாளர். |
| 4. தட்டார் | சேணியர். |

### கேள்விகள்

1. உனக்குத் தெரிந்த தொழிலாளிகள் யார் ?
2. தச்சர் செய்யும் சாமான்கள் சில சொல்லு.
3. கன்னாரின் தொழில் என்ன ?

# 17. மாதங்கள்

1. சுமார் முப்பது நாட்கள் கொண்ட காலம் ஒரு மாதம் எனப்படும்.
2. சில மாதங்களுக்கு முப்பத்தொரு நாட்களும் உண்டு.
3. பன்னிரண்டு மாதங்கள் சேர்ந்தது ஒரு வருஷம் அல்லது ஆண்டு எனப்படும்.
4. தமிழ் மாதங்கள் சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, தை, மாசி, பகுங்னி என்பன.
5. ஆங்கில மாதங்கள் ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சு, ஏப்ரல், மே, ஜுன், ஜுலை, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் என்பன.
6. மாதத்தின் நாட்கள் தேதி என்று சொல்லப்படும்.
7. சித்திரை மாதம் முதல் தேதி தமிழ் வருஷப் பிறப்பு.
8. ஜனவரி மாதம் முதல் தேதி ஆங்கில வருஷப் பிறப்பு.

9. சில மாதங்களில் அதிக வெயில் இருக்கும். இந்தக் காலம் கோடைக் காலம்.
10. சில மாதங்களில் அதிக மழை பெய்யும். இந்தக் காலம் மழைக் காலம்.
11. சில மாதங்கள் அதிகக் குளிராயிருக்கும். இந்தக் காலம் குளிர் காலம்.
12. கோடை, குளிர் முதலிய பருவகாலங்கள் மாறி மாறி வரும்.

| | | |
|---|---|---|
| மாதம் | வருஷம் | ஆண்டு |
| ஆங்கிலம் | தேதி | வருஷப் பிறப்பு |
| கோடை | குளிர் | பருவ காலங்கள் |

**பயிற்சி**

முதல் வரிசையிலுள்ள ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான சொற்களை இரண்டாவது வரிசையிலிருந்து சேர்த்துப் படி :—

| | |
|---|---|
| முப்பது நாட்கள் கொண்டது | ஆகஸ்டு |
| ஏழு நாட்கள் கொண்டது | புரட்டாசி |
| பன்னிரண்டு மாதங்கள் கொண்டது | வாரம் |
| ஆவணிக்குப் பின் வருவது | மாதம் |
| ஜுலைக்குப் பின் வருவது | வருஷம் |

**கேள்விகள்**

1. தமிழ் மாதங்களை வரிசையாகச் சொல்லு.
2. ஆங்கில மாதங்களை வரிசையாகச் சொல்லு.
3. கோடைக் காலத்தில் எது அதிகம் ?

# 18. காக்கையும் நரியும்

## படப் பயிற்சி—2




மேலேயுள்ள படத்தைக் கவனித்துப் பார். பிறகு கீழேயுள்ள விஞக்களுக்கு விடை சொல்:

1. (முதல் படத்தில்) பையன் கையில் என்ன வைத் திருக்கிருன் ?

2. காக்கை என்ன செய்கிறது ?

3. (இரண்டாவது படத்தில்) மரத்தின் மேல் உள்ள காக்கை தன் அலகில் என்ன வைத்திருக்கிறது ?

4. கீழே இருப்பது என்ன பிராணி ?

5. மூன்ருவது படத்தில் என்ன பார்க்கிருய் ?

காக்கையை நரி எப்படி ஏமாற்றியது என்ற கதை யைச் சொல்.



# 19. ஆலமரம்

1. இந்த மரம் ஆலமரம். ஆலமரத்தின் அடிப்பாகம் மிகவும் பருத்து இருக்கும். இதற்குப் பெரிய கிளைகள் உண்டு. கிளையிலிருந்து ஒரு வகை வேர் பூமியை நோக்கி விழும். அதற்கு ஆலம் விழுது என்று பெயர்.

2. ஆலம் விழுது பூமியில் ஊன்றிப் பெரிய தூண் போல் ஆகும். விழுதுகள் பல பக்கத்திலும் இறங்கிப் பூமியில் பதியும். அதனால், ஆலமரம் ஒரு பெரிய பந்தலைப் போல் தோன்றும்.

3. ஆலமரத்தின் அடியில் அநேகர் தங்கி இருக்கலாம். ஆடு மாடுகள் நிழலுக்காக அதன் அடியில் படுத்திருக்கும். அதன் கிளைகளில் பறவைகள் கூடு கட்டி வசிக்கும்.

4. ஆலம்பழம் மிகவும் சிறியது. அது ஒரு கோலி அளவாக இருக்கும். அந்தப் பழத்திற்குள் விதைகள் நிறைந்து இருக்கும். ஆலம் விதை கடுகு போல் தோன்றும். இவ்வளவு சிறிய விதையிலிருந்து அவ்வளவு பெரிய மரம் எவ்வாறு உண்டாயிற்று! இது மிகுந்த ஆச்சரியம் அல்லவா?

5. ஆலம்பழம் பறவைகளுக்கு ஆகாரம் ஆகும். ஆலிலையில் சிலர் அன்னமிட்டு உண்பார்கள். ஆலம் விழுது பல் துலக்க உதவும்.

"ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி."

| | | |
|---|---|---|
| வேல் | தங்கி | அன்னம் |
| கடுகு | பந்தல் | ஆகாரம் |
| விதை | துலக்க | எவ்வாறு |
| விழுது | பதியும் | இவ்வளவு |
| உறுதி | நோக்கி | ஆச்சரியம் |
| ஊன்றி | பருத்து | அடிப்பாகம் |

## பயிற்சி

I. 1. ஆலமரம் ஒரு பெரிய மரம்; சிறிய மரம் இரண்டு சொல்லு.

2. விழுது கீழ்நோக்கி விழும்; மேல் நோக்கிச் செல்லும் பாகம் எது?

3. ஆலம்பழம் மிகவும் சிறியது; மிகவும் பெரிய பழம் ஒன்று சொல்லு.

II. கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி:

1. ஆலமரத்தின் அடிமரம் மிகவும் ——— இருக்கும்.

2. ஆலம் விழுது பூமியில் ஊன்றிப் பெரிய ——— போல் ஆகும்.

3. ஆலம் ——— பறவைகளுக்கு உணவாகிறது.

4. ஆலம் விதை ——— போல் இருக்கும்.

## கேள்விகள்

1. விழுது என்பது என்ன?

2. ஆலமரம் பிராணிகளுக்கு எவ்வாறு உபயோகப் படுகிறது?

3. "ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி" என்றால் என்ன?

4. ஆலமரத்தின் எந்தப் பாகங்கள் நமக்குப் பயன் படுகின்றன?

# 20. நற்பழக்கம்

காலை எழுந்தவுடன் படிப்பு—பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு ;
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப் படுத்திக்கொள்ளு பாப்பா. 1

பொய் சொல்லக் கூடாது பாப்பா—என்றும்
புறஞ் சொல்லல் ஆகாது பாப்பா ;
தெய்வம் நமக்குத் துணை பாப்பா—ஒரு
தீங்கு வர மாட்டாது பாப்பா. 2

துன்பம் நெருங்கி வந்தபோதும்—நாம்
சோர்ந்துவிடல் ஆகாது பாப்பா
அன்பு மிகுந்த தெய்வம் உண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா. 3

சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்
நீதி உயர்ந்தமதி கல்வி—அன்பு
நிறைய உடையவர்கள் மேலோர். 4

—பாரதியார்

| | | |
|---|---|---|
| நீதி | உயர்ச்சி | போக்கிவிடும் |
| துணை | தெய்வம் | புறஞ்சொல்லல் |
| அன்பு | தாழ்ச்சி | சோர்ந்துவிடல் |
| மேலோர் | அத்தனையும் | வழக்கப்படுத்து |
| துன்பம் | உயர்ந்தமதி | கனிவு கொடுக்கும் |

## பயிற்சி

பின்வரும் கட்டங்களில் சில நற்பழக்கங்கள், சில தீய பழக்கங்கள் இவற்றைக் குறி.

| நற்பழக்கம் | தீய பழக்கம் |
|---|---|
| 1. | |
| 2. | |
| 3. | |
| 4. | |
| 5. | |

## கேள்விகள்

1. யார் மேலோர் ?
2. எது எது கூடாது ?
3. நமக்குத் துணை யார் ?





## 21. புறுவும் எறும்பும்

1. ஒரு வாய்க்காலின் கரையில் ஒரு மரம் இருந்தது. மரத்தில் ஒரு புறு வசித்தது. ஒரு நாள் புறு மரக்கிளையில் உட்கார்ந்துகொண் டிருந்தது. அப்பொழுது வாய்க்கால் தண்ணீரில் ஓர் எறும்பு விழுந்து விட்டது. அது கரையேற முடியாமல் தவித்தது.

2. புறு இதைப் பார்த்தது; எறும்புக்கு உதவி செய்ய நினைத்தது. உடனே, அது மரத்திலிருந்து ஒரு சிறு குச்சியை ஒடித்துத் தண்ணீரில் போட்டது. குச்சி எறும்பின்

அருகே மிதந்தது. எறும்பு அதன்மேல் ஏறிக்கொண்டது. குச்சி கரையில் ஒதுங்கிற்று. எறும்பு அதிலிருந்து தரையில் இறங்கித் தப்பித்தது.

3. சிறிது நேரத்தில் அங்கே ஒரு வேடன் வந்தான். மரத்திலிருந்த புருவைப் பார்த்தான். அதன் மேல் அம்பு எய்ய நினைத்தான். வில்லை எடுத்து அதில் அம்பை வைத்துக் குறி பார்த்தான். அவன் காலுக்கு அருகே அந்த எறும்பு இருந்தது. அது அவன் காலில் சுரீரென்று கடித்தது.

4. வேடன் வலி பொறுக்க முடியாமல் "ஆ!" என்று கத்தினான். அவன் குறி தவறிவிட்டது. வேடன் கூக்குரலைப் புரு கேட்டது. உடனே அது பறந்து போய்விட்டது.

| | | |
|---|---|---|
| குறி | தப்பி | மிதந்தது |
| வில் | எய்ய | வாய்க்கால் |
| கரை | அருகே | பொறுக்க |
| குச்சி | | |

## பயிற்சி

I. பொருத்தமாகச் சேர்த்துப் படி :

| | |
|---|---|
| 1. எறும்பு | ஒரு புறாவைக் கண்டான். |
| 2. வேடன் மரத்தில் | ஊர்ந்து சென்றது. |
| 3. அவன் வைத்த | வேறிடத்தை அடைந்தது. |
| 4. புறா பறந்து சென்று | குறி தவறிற்று. |

II. கோடிட்ட இடங்களில் பொருத்தமான சொற்களைச் சேர்த்துப் படி :

1. வாய்க்கால் தண்ணீரில் ——— விழுந்துவிட்டது.

2. ——— எறும்புக்கு உதவி செய்ய நினைத்தது.

3. புறா மரத்திலிருந்து ஒரு சிறு ——— ஒடித்துப் போட்டது.

4. ——— குச்சியின்மேல் ஏறிக்கொண்டது.

5. வேடன் ——— எடுத்து அதில் ——— வைத்துக் குறிபார்த்தான்.

6. ——— வேடன் காலில் சுரீரென்று ———.

7. வேடன் குறி ———.

## கேள்விகள்

1. எறும்புக்கு ஏற்பட்ட ஆபத்து என்ன ?

2. புறா எறும்பை எவ்வாறு காப்பாற்றியது ?

3. வேடன் எய்த அம்பிலிருந்து புறா எப்படித் தப்பியது ?

4. இந்தக் கதையால் நீ அறிவது என்ன ?




## 22. யானை

**கந்தன் :** அப்பா, இது என்ன ? இவ்வளவு பெரிதாய் இருக்கிறதே !

**தந்தை :** கந்தா, இதுதான் யானை. யானை, ஒரு பெரிய மிருகம் அல்லவா ?

**கந்தன் :** ஆமாம் அப்பா, யானை பெரிய மிருகம் தான். ஆனால் மிருகத்துக்கு நான்கு கால்கள் தானே இருக்கும். இதற்கு என்ன முன்னால் ஒன்றும் தொங்குகிறது ?

**தந்தை:** யானைக்கும் கால்கள் நான்குதான். ஆனால் முன்னால் தொங்குவது கை.

**கந்தன்:** இது என்ன அப்பா, மிருகத் துக்குக் கைகூடவா இருக்கும்?

**தந்தை:** ஆமாம்; யானைக்கு மாத்திரம் கை உண்டு. அதற்குத் தும்பிக்கை என்று பெயர்.

**கந்தன்:** ஏன் தும்பிக்கை என்று பெயர்?

**தந்தை:** யானைக்குத் தும்பி என்று ஒரு பெயர் உண்டு. ஆகையால், யானை யின் கையைத் தும்பிக்கை என்று கூறு வது வழக்கம்.

**கந்தன்:** சரிதான் அப்பா, அது என்ன கையில் துவாரம் இருக்கிறதே!

**தந்தை:** கெட்டிக்காரன்; நீ அதையும் கவ னித்து விட்டாயே. துவாரம் ஒன்று அல்ல; இரண்டு. அவைகளின் வழி யாகத்தான் யானை சுவாசிக்கிறது.

**கந்தன்:** இது என்ன, அப்பா! நாம் மூக் கினால் அல்லவா சுவாசிக்கிறோம்! யானை

கையினுல் சுவாசிக்கிறது என்கிறீர் களே?

**தந்தை:** ஆமாம்; யானையின் கை இரட் டைக் குழாய் போல இருப்பதால் மூக் காகவும் உதவுகிறது. யானை தண் ணீரையும் இந்தக் குழாய்களில் உறிஞ் சிப் பிறகு வாயில் விட்டுப் பருகும்.

**கந்தன்:** தும்பிக்கைக்கு அடியில் வெள்ளை வெளேரென்று நீண்டிருப்பவை என்ன?

**தந்தை:** அவைதான் தந்தம். தந்தம் என் பது யானையின் பல்............

**கந்தன்:** என்ன அப்பா! பல்லா இவ்வளவு பெரிதாய் நீண்டு இருக்கிறது? இதனுல் யானை தீனியை மென்று தின்னுமா?

**தந்தை:** கந்தா, இவைகள் பற்கள்தான். ஆனுல் இவைகளால் யானை ஆகாரத்தை மென்று தின்ன முடியாது. இந்தப் பற்களால் அது தன் பகைவர்களைக் குத்திக் கொல்லும். ஆகாரத்தை மெல் லக்கூடிய பெரிய பெரிய பற்கள் கடை வாயில் உண்டு. அவைகளால் யானை

மிகவும் கெட்டியான பொருள்களையும் நொறுக்கி மென்று தின்னும்.

| | | |
|---|---|---|
| பருகு | தந்தம் | நொறுக்கி |
| குத்து | பகைவர் | கடைவாய் |
| சுவாசி | துவாரம் | தும்பிக்கை |
| உறிஞ்சு | கெட்டிக்காரன் | இரட்டைக்குழாய் |

**பயிற்சி**

தகுந்த சொற்களால் கோடுகளை நிரப்பு :

1. யானை ஒரு பெரிய ———.
2. பூனை ஒரு ——— மிருகம்.
3. யானைக்குத் தும்பிக்கை ———.
4. மற்ற மிருகங்களுக்குத் தும்பிக்கை ———.

**கேள்விகள்**

1. யானை எதனால் சுவாசிக்கும் ?
2. யானைக்கு அதன் தந்தத்தினால் என்ன உபயோகம் ?
3. யானைக்கு உள்ள வேறு பெயர் என்ன ?

# 23. பேராசையுள்ள நாய்

## படப் பயிற்சி—3

*பின்வரும் படங்களைப் பார்த்துக் கதை சொல்லு :*



குறிப்பு :—1. நாய் எலும்பைக் கௌவிச் செல்லுதல். 2. வாய்க்காலை மரப்பாலத்தின் வழியாகக் கடத்தல். 3. தன் நிழலை நீரில் பார்த்தல். 4. வேறொரு நாய் எலும்பைக் கௌவிச் செல்வதாக நினைத்தல். 5. அந்த எலும்பையும் அடைய ஆசை கொள்ளுதல். 6. வாயிலிருந்த எலும்பையும் இழத்தல்.



## 24. வாழை

1. பிள்ளைகளே, முக்கனி என்றால் என்ன? உங்களுக்கு நினைவு இருக்கின்றதா? முக்கனிகளில் வாழைப்பழம் ஒன்று. வாழைக்காய் பழுத்தால் வாழைப் பழம் ஆகும். வாழைக்காய் வாழை மரத்தில் உண்டாகும்.

2. வாழை மரம் சுமார் பன்னிரண்டு அடி உயரம் உள்ளது. அதற்குக் கிளைகள் இல்லை. அதைச் சுற்றிலும் வாழைக் கன்றுகள் முளைத்திருக்கும்.

2699—4

3. வாழை மரத்தின் அடிப்பாகத்தில் பட்டைகள் ஒன்றின்மேல் ஒன்ருக மூடியிருக்கும். அதன் நுனிப்பாகத்தில் நீண்ட இலைகள் உண்டு. அவை நாலா பக்கமும் பரவியிருக்கும்.

4. வாழை குலைதள்ளப் பத்து மாதம் செல்லும். வாழைக் குலைக்குத் 'தாறு' என்று பெயர். வாழை மரம் ஒரே தடவை தான் தாறு போடும். அதில் காய்கள் சீப்புச் சீப்பாய் இருக்கும். ஒரு தாற்றில் பத்துப் பன்னிரண்டு சீப்புகள் இருக்கும்.

5. வாழைக் காய்கள் ஏன் சீப்புச் சீப்பாய் இருக்கின்றன? வாழைப் பூவின் மடலை விரித்துப் பாருங்கள். அந்த வாழைப்பூ ஒரு சீப்புப் போல இருக்கும். அதனுல்தான் அதிலிருந்து உண்டாகும் காய்களும் சீப்புச் சீப்பாக இருக்கின்றன.

6. வாழைமரம் முற்ற முற்ற அதன் நடுவில் தண்டு உண்டாகிப் பெருக்கிறது. அத்தண்டிலிருந்தே பூ உண்டாகிறது; பூவிலிருந்து காய் உண்டாகும். அதனுல்தான் குலை தள்ளின வாழை மரத்தின் நடுவில்

தண்டு இருக்கிறது. குலை தள்ளாத வாழையை 'ஈனு வாழை' என்பார்கள்.

7. வாழை மரம் விதையிலிருந்து முளைப்பதில்லை; கன்றே மரமாகிறது. மரத்தின் அடியில் உள்ள வாழைக் கன்றுகளை வேரோடு பெயர்த்து எடுப்பார்கள். வேர் கிழங்குபோல் உருண்டையாக இருக்கும். நிலத்தைப் பண்படுத்தி வாழைக் கன்றுகளை வரிசை வரிசையாய் நடுவார்கள். அந்த வரிசைகளின் இடையே நீளமான குழிகள் தோண்டித் தண்ணீர் பாய்ச்சுவார்கள்.

8. வாழையில் அநேக வகையுண்டு. அவை மொந்தன், ரஸ்தாளி, பூவன், செவ்வாழை, பச்சை வாழை, பேயன் முதலியன ஆகும்.

9. வாழையின் பூ, காய், தண்டு இவைகளைச் சமைத்து உண்கிறார்கள். வாழையிலை, பட்டை, இவை உண்கலமாக உபயோகப் படுகின்றன. கலியாணம் முதலிய காரியங்களுக்குப் பந்தற் கால்களில் வாழை மரங்களைக் கட்டுவார்கள். வாழைநார் பூத் தொடுப்பதற்கு உதவுகின்றது. ஒரு வகை

யான துணியும் வாழை நாரினுல் நெய்யப் படுகின்றது. வாழைப்பழம் மிகவும் சுவை யுள்ளது; உடம்புக்கும் நலம் தரும்.

| | | |
|---|---|---|
| நார் | குலே | உண்கலம் |
| துணி | சுமார் | கலியாணம் |
| தாறு | பட்டை | ஈனு வாழை |
| தண்டு | வரிசை | பாய்ச்சுவார்கள் |
| மடல் | பண்படுத்தி | சுவையுள்ளது |
| சீப்பு | முற்றமுற்ற | முக்கனி |

### பயிற்சி

மாற்றிப் படி.

1. வாழை மரத்தில் உபயோகப்படாத பாகம் ஒன்றும் இல்லே.

வாழை மரத்தில் எல்லாப் பாகங்களும் ———.

2. குலே தள்ளாத வாழை ஈனு வாழை எனப்படும்.
ஈனு வாழை என்பது ——— ———.

3. வாழையிலே, பட்டை இவைகள் உண்கலமாக உபயோகப்படுகின்றன.

வாழையிலே, பட்டை இவைகளே நாம் —— ——.

### கேள்விகள்

1. வாழை மரத்தின் பாகங்கள் என்னென்ன ?

2. வாழையில் பலவகைகள் எவை ?

3. சமைத்து உண்ணக் கூடிய வாழையின் பாகங்கள் எவை ?




## 25. நாணயங்கள்

**துரை :** சேகர்! இதோ, நான் எவ்வளவு பணம் வைத்திருக்கிறேன் பார்த்தாயா!

**சேகர் :** இவ்வளவு பணம் உனக்கு ஏது?

**துரை :** என் மாமா வந்திருக்கிருர். அவர் பணக்காரரர் அல்லவா! எனக்கு இவ் வளவு பணத்தையும் அவர் கொடுத்தார்.

**சேகர் :** இதில் பாதி புதுக் காசாக இருக்கிறதே !

**துரை :** ஆம். இந்த ரூபாயைப் பார். இதில் ஒரு பக்கத்தில் அசோக சின்னமாகிய மூன்று சிங்க உருவமிருக்கிறது. மறு பக்கம் தானியக் கதிர் இருக்கிறது.

**சேகர் :** ராஜா தலை கிடையாதா ?

**துரை :** இனிமேல் அச்சடிக்கப்படும் நாணயங்களில் ராஜா தலை இராது.

**சேகர் :** இது அரை ரூபாய்தானே ?

**துரை :** ஆம். இரண்டு அரை ரூபாய்கள் சேர்ந்தது ஒரு ரூபாய்.

**சேகர் :** இது நாலணுவா ?

**துரை :** ஆம். இதைக் கால் ரூபாய் என்றும் சொல்லலாம். நான்கு கால் ரூபாய்கள் சேர்ந்தது ஒரு ரூபாய்.

**சேகர் :** ஒரு ரூபாய், அரை ரூபாய், கால் ரூபாய் இந்த மூன்றும் வெள்ளிதானே ?

**துரை :** இல்லை. முன்பெல்லாம் இவை வெள்ளியால் செய்யப்பட்டன. இப்பொழுது இவை இரும்பு, நிக்கல் ஆகிய

உலோகங்களின் கலவையால் செய்யப் படுகின்றன. காந்தம் இந்த ரூபாய்களை இழுக்கும்.

**சேகர் :** இது அரையணு ; இது ஒரு அணு ; இது இரண்டணு ; சரிதானே ?

**துரை :** சரிதான். ஒரு ரூபாய்க்கு எத்தனை அணு, தெரியுமா ?

**சேகர் :** பதினறு அணு என்று யாருக்குத் தான் தெரியாது !

**துரை :** அரை ரூபாய்க்கு எத்தனை அணு ?

**சேகர் :** எட்டு அணு.

**துரை :** கால் ரூபாய்க்கு எத்தனை அணு ?

**சேகர் :** நாலணு.

**துரை :** புதுக் காலணுவைப் பார்த்தாயா?

**சேகர் :** பவுன் மாதிரி இருக்கிறதே! இனி மேல் ஓட்டைக் காலணு அச்சடிக்க மாட் டார்களா ?

**துரை :** இனி வரும் காலணுக்களில் ஓட்டை இராது.

**சேகர் :** இந்தப் பணத்தை எல்லாம் கூட்டிப் பார்ப்போம். மூன்று ரூபாய் இருக்கிறதே! இதை என்ன செய்யப்போகிருய்?

**துரை :** புத்தகங்கள் வாங்கப் போகிறேன்.

| | | |
|---|---|---|
| பணம் | பணக்காரர் | புதுக்காசு |
| சின்னம் | நாணயம் | இரும்பு |
| நிக்கல் | கலவை | காந்தம் |
| பவுன் | ஓட்டை | கூட்டி |

**பயிற்சி**

படத்தில் காட்டப்பட்ட நாணயங்களின் மதிப்பை எழுது.

| நாணயத்தின் பெயர் | மதிப்பு |
|---|---|
| 1. ஒரு ரூபாய் | பதினறு அணு |
| 2. | |
| 3. | |
| 4. | |
| 5. | |

**கேள்விகள்**

1. நமது நாட்டில் வழங்கும் நாணயங்கள் என்னென்ன ?

2. நாணயத்தின் இரண்டு பக்கங்களிலும் என்னென்ன குறிக்கப்பட்டிருக்கும் ?



## 26. நிலா

1. நிலவே, நிலவே, வெண்ணிலவே,
சிலநாள் மாலையில் நீயுதிப்பாய்.

2. உனது வெளிச்சம் உண்மையிலே
எனது மனத்தை இன்புறுத்தும்.

3. எங்கே னும்நான் போயிடினும்
அங்கே நீயும் உடன் வருவாய் !

4. ஒருநாள் உன்னைக் காண்கையிலே
உருவம் பிறையாய் இருந்ததுவே.

5. தினமும் நானும் உனைப்பார்த்து
மனமும் மிகவும் மகிழ்வடைந்தேன்.

6. ஒவ்வொரு நாளும் நீ வளர்ந்து
செவ்விய வட்ட வடிவடைந்தாய் !

7. இன்றே முழுவெண் ணிலவாகும்
என்றே யானும் மகிழ்வடைந்தேன்.

8. ஆனால் அதிலொரு கரியநிறம்
ஏனோ வந்தது? நீயுரைப்பாய்.

—வித்வான் ம. பெரியசாமிப் பிள்ளை

| | | |
|---|---|---|
| நிலவு | மகிழ்வு | உரைப்பாய் |
| ஏனோ | செவ்விய | இன்புறுத்தும் |
| பிறை | எங்கேனும் | வெண்ணிலவு |
| உருவம் | வெளிச்சம் | கரியநிறம் |

**பயிற்சி**

படத்தைக் கவனித்து அதிலுள்ள விஷயங்களைக் கூறு.

**கேள்விகள்**

1. இரவில் வெளிச்சம் தருவது எது ?
2. எதற்கு முழு நிலா என்று பெயர் ?
3. முழு நிலா தினமும் தெரியுமா ?




## 27. தெனாலிராமன்

1. தெனாலி என்ற ஊரில் இராமன் என்னும் பெயருள்ள ஒருவன் இருந்தான். அவனுக்குத் தெனாலிராமன் என்று பெயர். அவன் புத்திக் கூர்மையுள்ளவன். பிறரை ஏய்ப்பதில் மிகவும் சமர்த்தன்.

2. ஒரு நாள் இரவில் தெனாலிராமன் வீட்டிற்கு மூன்று திருடர்கள் வந்தார்கள். அவர்கள் வீட்டின் வெளிப் புறத்தில் ஓரிடத்தில் ஒதுங்கி நின்றார்கள். வீட்டிற்குள்

எப்படிப் போகலாம் என்பதைப்பற்றி ஒருவ ரோடு ஒருவர் இரகசியமாய்ப் பேசிக்கொண் டனர். வீட்டிற்குள் விழிப்பாய் இருந்த இராமனுக்கு இது தெரிந்துவிட்டது. உடனே அவன் ஒரு தந்திரம் செய்தான்.

3. தெனுலிராமன் தன் மனேவியை அழைத்து, "ஊரில் திருட்டு அதிகமாய் நடக் கிறது. நமது வீட்டுக்கும் திருடர்கள் வந் தாலும் வருவார்கள். ஆகையால், நமது வீட்டில் உள்ள விலை உயர்ந்த பாத்திரங்களே இந்தப் பெட்டியில் இட்டுப் பூட்டி நமது தோட்டத்தில் உள்ள கிணற்றில் போட்டு விடுவோம். திருட்டுப் பயம் நீங்கிய பிறகு இதை எடுத்துக் கொள்வோம்" என்று திரு டர்கள் காதில் விழும்படி உரக்கக் கூறினுன். பின்பு ஒரு பெட்டியில் சில கற்களேக் 'கடமுட' என்று ஓசை கேட்கும்படிப் போட்டான்.

4. தெனுலிராமனும் அவன் மனேவியும் அந்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு சென்று, வீட்டின் பின்புறமுள்ள கிணற்றில் தொப்பென்று போட்டார்கள்.

5. திருடர்கள் இதையெல்லாம் ஒதுங்கி நின்று கவனித்துக் கொண்டிருந்தார்கள். தெனுலிராமனும் 'மேல் என்ன நடக்கிறது பார்ப்போம்' என்று ஒரு பக்கமாக ஒதுங்கி நின்ருன். திருடர்கள் சிறிது நேரம் கழித்துக் கிணற்றண்டை சென்ருர்கள். அவர்களில் ஒருவன் கிணற்றில் இறங்கி அதை எடுக்க முயன்ருன். தண்ணீர் அதிகமாக இருந்ததனுல் அவன் மேலே ஏறி வந்து விட்டான்.

6. பின்பு அந்தத் திருடன் கொஞ்ச நேரம் யோசித்து, மற்றவர்களை நோக்கி, "இந்தக்கிணற்றிலுள்ள தண்ணீரை எல்லாம் இறைத்துவிட்டால் மிக எளிதாகப் பெட்டியை எடுத்துக் கொள்ளலாம்" என்று கூறினுன். அவர்களும் இதற்குச் சம்மதித்தார்கள்.

7. அந்தக் கிணற்றில் ஒரு ஏற்றமரம் இருந்தது. அந்த ஏற்றமரந்தான் தெனுலி ராமன் தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச உதவுவது. திருடர்களில் இருவர் ஏற்று ஓடினுர்கள். ஒருவன் தண்ணீரைச் சாலினுல் மொண்டு மொண்டு விட்டான். இவ்வாறு

அவர்கள் இராத்திரி முழுதும் தண்ணீர் இறைத்தார்கள். ஏன்? அவர்களுக்கு இருந்த பணத்தாசையால் அல்லவா?

8. தெனாலிராமன் இவர்கள் இறைத்து விட்ட தண்ணீரை யெல்லாம் தன் தோட்டத்தில் உள்ள செடிகளுக்கும், பயிர்களுக்கும் மடை மாறிமாறிப் பாய்ச்சிக்கொண்டே இருந்தான். இப்படியாக இரவு கழிந்தது. விடியற்காலம் ஆனவுடன் தெனாலிராமன் திருடர்களை நோக்கி, "ஓ ஆட்களே! என் தோட்டம் முழுதும் நன்றாகத் தண்ணீர் பாய்ந்துவிட்டது. தண்ணீர் இறைத்தது போதும்; உங்கள் வேலையை நிறுத்துங்கள்" என்று உரக்கக் கூவினான்.

9. இதைக் கேட்ட திருடர்கள் வெட்கமும் திகிலும் அடைந்து ஒரே ஓட்டமாக ஓடி மறைந்தனர். பிள்ளைகளே, தெனாலிராமன் சமர்த்தைப் பார்த்தீர்களா?

| | | |
|---|---|---|
| சால் | விழிப்பு | கூவினன் |
| திகில் | எளிதாக | ஏய்ப்பது |
| மடை | வெட்கம் | இறைத்தது |
| மனைவி | மொண்டு | மாறி மாறி |
| உரக்க | சம்மதி | இரகசியம் |
| ஒதுங்கி | சமர்த்து | புத்திக் கூர்மை |
| தந்திரம் | உதவுவது | மறைந்தனர் |

## பயிற்சி

படத்தைப் பார்த்து விடை சொல்லு :

1. ஏற்று ஏறியிருப்பவர்கள் யார்? கீழே நிற்பவன் யார்? அவர்கள் என்ன செய்கிறார்கள்? ஏன்?

2. மண் வெட்டி வைத்துக்கொண்டு நிற்பவன் யார்? அவன் என்ன செய்கிறான்?

## கேள்விகள்

1. தெனாலிராமன் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது?

2. அவன் குணங்கள் யாவை?

3. அவனுடைய சமர்த்தை விளக்க ஒரு கதை சொல்லு.

# 28. தன் பலம் அறியாத காக்கை

## படப் பயிற்சி—4

**படங்களைப் பார்த்துக் கதையைச் சொல்லு :**




**குறிப்பு** :—1. கழுகு ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் செல்லுதல் 2. அதை ஒரு காக்கை கவனித்தல். 3. காக்கையும் ஒரு ஆட்டைத் தூக்கிச் செல்ல முயற்சித்தல். 4. காக்கையின் கால்கள் ஆட்டு ரோமத்தில் சிக்கிக்கொள்ளல். 5. ஆட்டுக்காரன் காக்கையைப் பிடித்துத் தன் வீட்டிற்குக் கொண்டு வருதல். 6. காக்கையை அவன் தன் பிள்ளைகளிடம் காட்டிவிட்டுப் பறக்கவிடுதல்.




## 29. உடல் நலம் பேணுதல்

[தந்தையும் மகனும் உரையாடல்]

**தந்தை :** முருகா, இன்று பள்ளிக்கூடம் போனாயா ?

**முருகன் :** போனேன் அப்பா; இப்பொழுது தான் அங்கிருந்து வருகிறேன்.

**தந்தை :** ஏன் இவ்வளவு நேரம்?

**முருகன் :** பாடம் முடிந்தவுடன் உபாத்தியாயர் எங்களுடன் பேசிக்கொண்டிருந்தார், அப்பா.

**தந்தை :** எதைப்பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்?

**முருகன் :** உடல் நலம் பேணுதலைப் பற்றிப் பேசிக்கொண் டிருந்தார்.

**தந்தை :** உடல் நலம் பேணுதலைப் பற்றி அவர் என்ன சொன்னார்?

**முருகன் :** அதை நான் நன்றாகக் கவனிக்க வில்லை, அப்பா.

**தந்தை :** கவனிக்காமல் இருக்கலாமா? உடல் நலம் பேணுதல் மிகவும் நல்ல காரியமாயிற்றே.

**முருகன் :** உடல் நலம் பேணுதல் என்றால் என்ன? நீங்கள் சொல்லுங்கள் அப்பா.

**தந்தை :** முருகா, சொல்லுகிறேன் கேள். உடல் நலம் என்பது நமது உடம்ப நோய் இன்றிச் சௌக்கியமாக இருப் பது. நமது உடம்பு சுகமாக இருக்கும் படி நாம் கவனித்துக் கொள்ளுதலே உடல் நலம் பேணுதல் ஆகும்.

**முருகன் :** உடல் நலத்தைக் கவனிக்காவிட் டால் என்ன, அப்பா?

**தந்தை:** உடல் நலத்தைக் கவனிக்காவிடில் பல வியாதிகள் உண்டாகும். நன்ருகச் சாப்பிட முடியாது. தூக்கம் வராது. உடம்பில் பலம் குறையும். உடம்பு நல மில்லாதவன் எந்த வேலையையும் நன்ருகச் செய்ய முடியாது.

**முருகன்:** அப்படியாளுல் உடல் நலத்தைப் பேணுவது அவசியம்தான், அப்பா. ஆளுல், உடல் நலத்தைப் பேணுவது எப்படி?

**தந்தை:** முருகா, சொல்லுகிறேன் கேள். உடல் நலத்தோடு இருக்கவேண்டு மாளுல், நாம் சில விதிகளைக் கவனித்து நடக்கவேண்டும்.

(1) சுவாசிக்கும் காற்றும் குடிக்கும் தண்ணீரும் சுத்தமாக இருக்க வேண்டும்.

(2) நல்ல உணவைச் சாப்பிடவேண்டும்.

(3) முதலில் சாப்பிட்ட உணவு சீரண மாகிப் பசி எடுத்த பின்பே மறுபடியும் சாப்பிடவேண்டும்.

(4) தினந்தோறும் குளித்து உடம்பைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

(5) நாள்தோறும் காலை மாலை நேரங் களில் ஓடி ஆடி விளையாடவேண்டும்.

**முருகன்:** அப்பா, இனிமேல் நான் நீங்கள் சொன்னபடியே செய்து உடல் நலத் தைப் பேண முயற்சி செய்கிறேன்.

| | | |
|---|---|---|
| உடல்நலம் | வியாதி | பேணுதல் |
| கவனி | காரியம் | சுவாசித்தல் |
| நோய் | சீரணம் | சௌக்கியம் |
| முயற்சி | அவசியம் | தினந்தோறும் |
| குறையும் | தூக்கம் | மறுபடியும் |

### பயிற்சி

பொருத்தமாகச் சேர்த்துப் படி :

| | |
|---|---|
| 1. நல்ல உணவை | குடிக்க வேண்டும் |
| 2. சுத்தமான நீரை | நல்ல காரியம் |
| 3. உடல்நலம் பேணுதல் | உண்ண வேண்டும். |

### கேள்விகள்

1. உடல்நலம் பேணுதல் என்றால் என்ன ?
2. உடல்நலம் பேணாவிடில் என்ன நேரும் ?
3. உடல்நலம் பேணுவது எப்படி ?



## 30. காக்கை

1. காக்கை நாம் அடிக்கடி பார்க்கும் பறவை. அது கருமை நிறம் உடையது. ஆனால், அதன் கழுத்துச் சாம்பல் நிறமாக இருக்கும். ஒரு வகையான காக்கைக்கு உடம்பு முழுதும் கருமையாகவே இருக்கும். அதற்கு 'அண்டங் காக்கை' என்று பெயர்.

2. காக்கை மரக்கிளைகளில் கூடு கட்டிக் கொண்டுவசிக்கும்; கூட்டில் முட்டை இட்டுக் குஞ்சு பொறிக்கும். காக்கையின் குஞ்சுகள் கருமையாகவும் விகாரமாகவும் இருக்கும். ஆயினும், அது குஞ்சுகளை மிகவும் கவன மாகப் பாதுகாக்கும்; அவைகளுக்கு இரை ஊட்டும்; அவைகளிடத்தில் மிகுந்த அன்பாக

இளங்கிளைகள், கரும்பு, மூங்கிற்குருத்து முதலியவை ஆகும். இது மிகவும் பருத்த உடல் உடையது. ஆதலால் அதற்கு மிகுந்த தீனி வேண்டும். அதனாலேயே "யானைக்குத் தீனி போடுவதுபோல்" என்னும் பழமொழியும் வழங்கி வருகிறது. யானை தன் தும்பிக் கையினால் மரக்கிளைகளை வளைத்து, இலை தழைகளைப் பறிக்கும். கரும்பு முதலியவற்றையும் ஒரே சுற்றாகச் சுழற்றிப் பிடுங்கிவிடும். தும்பிக்கையில் எலும்பு இல்லை. அதனால், அதை யானை தன் விருப்பம்போல் வளைத்து ஆகாரத்தை எடுத்து வாயில் போட்டுக் கொள்ளும். தண்ணீரையும் அதில் உள்ள குழாய் போன்ற துவாரத்தில் உறிஞ்சிப் பின்பு வாயில் விட்டுப் பருகும். யானையின் கடைவாயில் மிகவும் கெட்டியான பெரிய பற்கள் உண்டு. அவைகளால் முழுத் தேங்காயையும் '**நொறு நொறு**' என்று கடித்துத் தின்றுவிடும்.

5. யானைகள் காட்டில் கூட்டம் கூட்டமாகச் சஞ்சரிக்கும்; ஓர் இடத்தினின்று மற்றோர் இடத்திற்குப் போகும்போது வயது சென்ற களிறுகள் முன்னும், பிடிகளும் கன்றுகளும் நடுவிலும், இளம் பருவமுள்ளவை பின்னும் செல்லும். யானை பெருந் தன்மையும் கூர்மையான அறிவும் உள்ள பிராணி. அதற்கு மிகுந்த ஞாபக சக்தியும் உண்டு. ஒருவர் தனக்குச் செய்த நன்மை தீமைகளை என்றும் மறக் காது. பிறர் செய்த தீமையைப் பல ஆண்டுகள் கழிந்தாலும் மறவாது நினைத்திருந்து சமயம் நேர்ந்த

பொழுது பழிவாங்கி விடும். ஆயினும், யானை தன்னை அன்போடு வளர்க்கும் பாகனுக்கு அடங்கி அவன் சொற்படி நடக்கும்.

6. யானை பெரிய உருவமுடையது; ஆயினும் அது நடக்கும்போது காலோசை கேளாது. ஆகை யால், அது வருவதை மனிதர்கள் தெரிந்து கொள்ளு வதற்காக அதற்கு மணி கட்டுவது வழக்கம். யானை பின்னே வரினும் அதன் மணியோசை அது வரு வதை முன்னே அறிவித்துவிடும். 'யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே' என்பது பழமொழி. யானை விரைவாக ஓட இயலாது. ஆயி னும், பெருநடையாக நடந்து மணிக்குப் பதினைந்து மைல் வீதம் செல்லும்.

7. மைசூர், திருவாங்கூர், பர்மா, இலங்கை முதலிய இடங்களில் உள்ள காடுகளிலும் ஆப் பிரிக்காக் கண்டத்தின் வனங்களிலும் யானை மிகுதி யாகக் காணப்படும். யானை நூறு வருஷம் வரை உயிரோடு வாழும். பழகிய யானைகளின் உதவியால் காட்டு யானைகளையும் யானைக் கன்றுகளையும் பிடித் துக் கொண்டுவந்து வளர்ப்பதுண்டு. அவ்வாறு வளர்க்கப்படும் யானைகளைப் பெரிய கோவில்களிலும், அரண்மனைகளிலும் பார்க்கலாம். 'சர்க்கஸ்' ஆட் டத்திலும் யானைகளைப் பழக்கிப் பல வேடிக்கைகள் காட்டுவார்கள்.

8. அலங்காரத்தின் பொருட்டுக் கோயில்களி லும், அரசர்கள் அரண்மனைகளிலும் யானை வளர்க்

கப்படுகிறது. காடுகளில் வெட்டப்பட்ட மரங்களைக் கொண்டு வருவதற்கு யானையை உபயோகிக்கிறார்கள். யானையின் தந்தம் மிக விலை உயர்ந்தது. தந்தத்தால் மிக நுட்பமான வேலைப்பாடு உள்ள சாமான்கள் செய்கிறார்கள். ஆதலால், தந்தத்திற்காகவும் யானையை வேட்டையாடுகிறார்கள். முற்காலத்தில் நமது நாட்டில் இருந்த நால்வகைப் படைகளில் யானைப்படை ஒரு வகை. அரசர்களும் மற்றைய பெரியோர்களும் சிற்சில காலங்களில் யானைமேல் அம்பாரி வைத்து அதன் மேல் ஏறி நகர் வலம் வருதல் உண்டு.

| | | | |
|---|---|---|---|
| பிடி | இயலாது | நகர்வலம் | தாடை |
| களிறு | அம்பாரி | ஞாபகசக்தி | தடித்த |
| தந்தம் | அரண்மனை | பழிவாங்குதல் | உறுப்பு |
| கைம்மா | வருக்கம் | பெருநடை | குழாம் |
| அடிக்கடி | சஞ்சரித்தல் | அலங்காரம் | வேலைப்பாடு |
| உறிஞ்சுதல் | பெருந்தன்மை | ஒரே சுழற்றாக | பனந்துண்டு |

## அரும்பதவுரை

அவயவம் - உறுப்பு. பழிவாங்குதல் - தீமை செய்தவர்களுக்குப் பதில் தீங்கு செய்தல். நகர்வலம் - ஊரை வலமாகச் சுற்றி வருதல். இயலாது - முடியாது. அரண்மனை - அரசர் வசிக்கும் வீடு. கைம்மா - கையையுடைய மிருகம், யானை. வருக்கம் - இனம்.

## பயிற்சி

### இலக்கணம்

1. **யானை மிகுந்த ஞாபக சக்தி உடையது.**—இது ஒரு வாக்கியம் அல்லவா? இதில் பொருள் முடியும் இடம் எது? ‘உடையது’ என்பது பொருள் முடிவு பெற்று நிற்கும் இடம். பொருள் முடிவு பெற்று நிற்கும் இடம் பயனிலை எனப்படும்.

பயனிலை என்பது ஒரு வாக்கியத்தின் பொருளை முடித்து நிற்கும் சொல்.

2. 'உடையது' என்ற பயனிலைக்குமுன் யார் அல்லது எது என்னும் சொல்லை வைத்துக் கேள்வி கேட்டால் 'யானை' என்ற விடை வரும். 'யானை' என்பது இவ்வாக்கியத்தின் எழுவாய். 'எழுவாய்' என்பதற்குத் தொழில் உண்டாகும் இடம் என்று பொருள்.

எழுவாய் என்பது தொழில் உண்டாவதற்குக் காரணமாக உள்ள கருத்தாவைத் தெரிவிக்கும் சொல்.

3. 'உடையது' என்ற பயனிலைக்குமுன் 'யாரை' அல்லது 'எதை' என்னும் சொல்லை வைத்துக் கேள்வி கேட்டால் 'ஞாபக சக்தி' என்ற விடை வரும். 'ஞாபக சக்தி' என்பது இவ்வாக்கியத்தின் செயப்படுபொருள் ஆகும்.

செயப்படுபொருள் என்பது கருத்தாவின் தொழிலை அடையும் பொருளைக் குறிக்கும் சொல்.

எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் என்பன ஒரு வாக்கியத்தின் முக்கியமான பாகங்கள் ஆகும்.

4. பின்வரும் வாக்கியங்களில் உள்ள எழுவாய், பயனிலை, செயப்படுபொருள்களை எடுத்துக் கூறு :

(1) யானை முழுத்தேங்காயை நொறுநொறு என்று கடித்துத் தின்றுவிடும்.

(2) நீ யானையைப் பார்த்திருக்கிறாயா ?

(3) யானை தன் தும்பிக்கையால் தழைகளைப் பறிக்கும்.

## கேள்விகள்

1. யானையின் முகத்திலிருந்து தொங்கும் உறுப்புக்கு என்ன பெயர்? அது அதற்கு எவ்வாறு உபயோகப்படுகிறது?

2. யானையைப் பற்றிய பழமொழிகள் எவை?

3. யானையினால் மனிதருக்கு என்ன உபயோகம்?

4. யானையினிடத்தில் அமைந்துள்ள முக்கியமான குணம் என்ன?

5. யானைகள் எங்கே வசிக்கும்? மனிதர்கள் அவைகளை எவ்வாறு பிடித்து வளர்க்கிறார்கள்?

# 4. இளங்கோ

1. நாம் பேசும் பாஷை தமிழ். பாஷை, மொழி யென்றும் கூறப்படும். தமிழ்மொழி வழங்கும் நாடு தமிழ்நாடு. முற்காலத்தில் தமிழ்நாடு மூன்று பிரிவாக இருந்தது. அவைகள் சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு என்பன. இவற்றுள் **சேரநாடு** என்பது தென்னிந்தியாவின் மேற்குப் பகுதியே. இதில் பல மலைகள் உள்ளன. ஆதலால், சேர நாட்டுக்கு மலைநாடு என்றும் பெயர் உண்டு. சேர நாட்டின் தலைமை நகரம் **வஞ்சிமா நகர்** என்பது.

2. சேரநாட்டை ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன் **சேரலாதன்** என்னும் ஓர் அரசன் ஆண்டு வந்தான். தமிழ்நாட்டு மன்னனாகிய இச் சேரலாதன் புகழ் பாரதநாடு முழுதும் பரவியிருந்தது. இம்மன்னனுக்கு இவன் மனைவி **நற்சோணை** என்பவள் வயிற்றில் இரண்டு புதல்வர்கள் உதித்தனர். இவர்களில் மூத்தவன் பெயர் **செங்குட்டுவன்**; இளையவன் பெயர் **இளங்கோ**.

3. அரசகுமாரர்களில் மூத்தவனே தந்தைக்குப் பின் அரசாளும் உரிமையுடையோன். ஆதலின், அவ்வுரிமை தோன்ற அரசன் தன் மூத்த மைந்தனுக்குச் ‘செங்குட்டுவன்’ எனப் பெயரிட்டான். ‘குட்டுவன்’ என்பது சேர மன்னரின் பட்டப் பெயர்களில் ஒன்று. ‘செங்குட்டுவன்’ என்பதற்கு ‘நல்ல சேர மன்னன்’ என்பது பொருள். இளையவனும் அரச வமிசத்தில்

பிறந்தவனல்லவா? ஆதலின், அவனுக்கும் அச்சிறப்புத் தோன்ற 'இளங்கோ' என்று பெயர் வழங்கியது. இளங்கோ என்பதற்கு இளவரசன் என்று பொருள்.

4. இளங்கோ கல்வியில் தேர்ச்சி பெற்றவன்; தமிழில் பெரும்புலமை உடையவன்; நற்குணமும் நல்லொழுக்கமும் வாய்ந்தவன்; தெய்வபக்தி உள்ளவன்; அரசனுக்கு வேண்டிய அங்கலட்சணம் முழுதும் பொருந்தியவன்.



5. ஒரு நாள், சேரலாதன் தன் மக்களோடும், அமைச்சர், சேனைத் தலைவர் முதலியவரோடும் கொலுவிருக்கும்போது ஒரு நிமித்திகன் வந்தான். அவன் அரசன் காட்டிய ஆசனத்தில் அமர்ந்து அரச குமாரர்களை அடிமுதல் முடிவரையில்

சற்று நேரம் ஏற இறங்கப் பார்த்தான். பின்பு, 'இளங்கோ அரசாளும் தகுதியுடையவன்; ஆதலின் அவன் அரசுரிமை பெறுவான்,' எனக் கூறினான். அது கேட்ட அரசன் முதலியோர் திகைப் பெய்தினர்.

6. இளங்கோவோ அவனை வெகுண்டு நோக்கினான். ஏன்? செங்குட்டுவன் மூத்த புதல்வன். ஆதலால் அவனே தன் தந்தைக்குப் பின் அரசாளும் உரிமை உடையவன். ஆனால் நிமித்திகன் தமையன் இருக்கவும் தம்பிக்கு அரசுரிமை உண்டு என்று கூறினான். இது முறை தவறு அல்லவா? அதனால்தான் இளங்கோ அவனிடம் சினங்கொண்டான்.

7. இளங்கோ, நிமித்திகன் கூறியதைக் கேட்ட தன் தமையன் மிக்க வருத்தமடைவானே என எண்ணினான்; தமையன் மனத்தில் ஏற்படக்கூடிய ஐயத்தைப் போக்கவும் நிமித்திகன் சொல்லைப் பொய்யாக்கவும் கருதினான். உடனே, தன் ஆடை அணிகளையெல்லாம் கழற்றி வைத்துவிட்டுத் துறவுக்கோலம் பூண்டான்; இனி அரண்மனையைத் திரும்பிப் பார்ப்பதில்லை என்னும் உறுதியுடன் வஞ்சிமா நகரின் கிழக்கே உள்ள ஒரு கோயிலுக்குச் சென்று அங்கேயே வசித்து வரலானான். தமையனிடம் தம்பிக்கு உள்ள அன்பு எத்தகையது, பாருங்கள்! இளமைப் பருவத்தில் அரச போகத்தை நீத்துத் துறவியாதல் எல்லாருக்கும் எளிதில் இயலுமா?

8. இளங்கோவின் துறவைக்கண்ட அனைவரும்

அவரிடம் மிகுந்த அன்பும் பணிவும் உடையவர்கள் ஆனார்கள் ; அவர் துறவு பூண்டது முதல் அவரை யாவரும் ' இளங்கோ அடிகள் ' என அழைத்தார்கள். அடிகள் என்பது பெரியோர்களுக்கு வழங்கும் பட்டப் பெயர். அப்பூதியடிகள், பட்டினத்தடிகள், காந்தியடிகள் என வழங்கும் பெயர்களை நீங்கள் கேட்டிருப்பீர்கள்.

9. சேரலாதனுக்குப் பின் செங்குட்டுவன் அரசாட்சியை மேற்கொண்டு மிகச் சிறப்பாக ஆண்டு வந்தான். அப்பொழுது அவனுக்குச் சேரன் செங்குட்டுவன் என்று பெயர் வழங்கலாயிற்று. சேரன் என்பது குடிப்பெயர். அவன் தன் அருமைத் தம்பியாரிடம் அளவற்ற அன்பும் மதிப்பும் உடையவனாக இருந்தான்.

10. செங்குட்டுவன் காலத்தில் நெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் மதுரையில் அரசாட்சி செய்தான். அவன், சோழ நாட்டில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து மனைவியின் சிலம்பை விற்க வந்த கோவலனை, அரண்மனைச் சிலம்பு திருடிய கள்வன் எனக் கருதி, அநியாயமாகக் கொலை செய்வித்தான். கோவலன் மனைவி கண்ணகி கற்பிற் சிறந்தவள். அவள் தன் கணவன் கள்வன் அல்லன் என அரசனுக்கு நிரூபித்துக் காட்டினாள். பாண்டியன் தன் பெரும்பிழையை அறிந்து அஞ்சி உயிர் துறந்தான். கண்ணகி மதுரை மாநகரைத் தீக்கிரையாக்கி வஞ்சிமாநகர் சென்று அங்கு ஆகாயத்திலிருந்து

விமானத்தில் தெய்வ வடிவோடு வந்த தன் கணவனுடன் தானும் சுவர்க்கம் சென்ருள்.

11. இவ் வரலாற்றைத் தமிழ்ப் பெரும்புலவராகிய நமது இளங்கோவடிகள் ஒரு சிறந்த காப்பியமாகச் செய்துள்ளார். அதற்குச் 'சிலப்பதிகாரம்' என்று பெயர். கோவலன் கொலையுண்டதற்குச் சிலம்பு ஒரு முக்கிய காரணம். ஆதலின் கோவலன் கண்ணகி இவர்கள் வரலாற்றைக் கூறும் நூலுக்குச் சிலப்பதிகாரம் எனப் பெயர் வழங்குகிறது. சிலப்பதிகாரம் மிகச் சுவையுள்ள நூல். அதைப் படிப்பதனுல் தமிழறிவு மிகும்; பல அருமையான செய்திகளை அறிந்து கொள்ளலாம். நீங்கள் பெரியவர்களான பிறகு அதைப் படிக்க வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| தகுதி | கள்வன் | வெகுண்டு | சினம் |
| கற்பு | போகம் | இளங்கோ | திகைப்பு |
| கொலு | விமானம் | நிமித்திகன் | அடிகள் |
| பாஷை | அடிகள் | நிரூபித்து | குடிப்பெயர் |
| உரிமை | ஆசனம் | பட்டினம் | மைந்தன் |
| புதல்வர் | வரலாறு | அநியாயம் | உதித்தனர் |
| குமாரர் | காப்பியம் | ஏற இறங்க | வழங்குதல் |
| சிலம்பு | சுவர்க்கம் | அங்கலட்சணம் | பட்டப் பெயர் |
| அரசுரிமை | வமிசம் | சேனைத் தலைவர் | வாய்ந்தவன் |

## அரும்பதவுரை

இளங்கோ - இளவரசன். கோ - அரசன். நிமித்திகன் - ஜோசியன். உரிமை - பாத்தியம். நிரூபித்து - விளக்கிக்காட்டி

**சுவர்க்கம்** - புண்ணியம் செய்தவர்கள் வாழும் உலகம். காப்பியம் - கதையாக உள்ள நூல். அங்கம் - உறுப்பு. இலட்சணம் - அழகு.

## பயிற்சி

1. நெடுஞ்செழியன் கோவலனைக் கொலை செய்வித்தான்.

2. கண்ணகி மதுரைமா நகரைத் தீக்கிரையாக்கினாள்.

3. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் எழுதினார்.—இவ் வாக்கியங்களை முறையே கோவலன், மதுரைமா நகர், சிலப்பதிகாரம் என்று தொடங்கும்படி மாற்றி எழுது.

## கேள்விகள்

1. இளங்கோ துறவு பூண்டதற்குக் காரணம் என்ன?

2. அடிகள் என்னும் பட்டம் யாருக்கு உரியது?

3. இளங்கோவடிகள் செய்த காவியம் யாது? அதன் கதையைச் சுருக்கமாகச் சொல்லு.

# 5. ஊர்க் காவல்

[உரையாடல்]

**மகன் :** அப்பா, இவன் யார்? சாலையின் மத்தியில் அசையாமல் நின்று கொண்டிருக்கிறான்.

**தந்தை :** இவன்தான் போலீஸ்காரன்; வண்டிகள் இடது பக்கமாகப் போகவேண்டும்; வலது பக்கமாக வரவேண்டும். அவ்வாறு வண்டிகள் போகவும் வரவும் செய்வதற்கே இவன் சாலையின் நடுவில் நிற்கிறான்.

**மகன் :** சரிதான் அப்பா, அவனுக்கு ஏன் போலீஸ்காரன் என்று பெயர்?

**தந்தை :** போலீஸ் என்றால் ஊர்க்காவல் என்று பொருள். அது ஒரு ஆங்கிலச் சொல். இவன் செய்யும் வேலையும் ஊரைக் காவல் புரிவதே. அதனால் இவனுக்குப் போலீஸ்காரன் என்று பெயர்.

**மகன் :** இவன் என்ன ஊர்க்காவல் செய்கிறான்?

**தந்தை :** இப்பொழுது பார்; ஒரு கையைத் தூக்குகிறான்; இன்னொரு கையை ஒரு பக்கமாகத் திருப்புகிறான்; ஏன் இப்படிச் செய்கிறான் தெரியுமா? இவன் கையைத் தூக்கும் பக்கத்திலிருந்து ஒரு வண்டி வருகிறது. அதை வராமல் நிறுத்துவதற்குக் கையைத் தூக்குகிறான். மற்றொரு பக்கத்திலிருந்த இன்னொரு வண்டி வருகிறது. அது போகலாமென்

பதற்கு அது போகவேண்டிய பக்கமாகக் கையைத் திருப்புகிறன்.

**மகன் :** வண்டிகள் போகவேண்டிய பக்கம் இவனுக்கு எப்படித் தெரியும்?




**தந்தை :** பொதுவாக வண்டிகள் சாலையில் இடது பக்கமாகப் போகவேண்டும்; வலது பக்கமாக வரவேண்டும். இது விதி. இவ்விதியை வண்டி ஓட்டு கிறவர்கள் அறிந்து விதி தவருமல் ஓட்டவேண்டும். முச்சந்தி, நாற்சந்திகளுக்கு வரும்பொழுது தம் வண்டி போகவேண்டிய திசை வலது பக்கம் அல்லது இடது பக்கம் என்பதைத் தங்கள் கைகளால் காட்டு வார்கள். அதைக்கொண்டு போலீஸ்காரன் அவ் வண்டிகள் போகவேண்டிய பக்கத்தைத் தெரிந்து கொள்வான்.

**மகன் :** போலீஸ்காரன் ஏன் ஒரு வண்டியை

நிறுத்துகிருன் ; மற்ருெரு வண்டியை போகச்சொல்லு கிருன் ?

**தந்தை :** சந்திகளில் சில வேளையில் மூன்று நான்கு பக்கங்களிலிருந்து ஒரே சமயத்தில் வண்டிகள் வந்து சேரும். அப்பொழுது அவை ஒன்ருேடொன்று மோதிக்கொள்ளாமல் இருப்பதற்காகவே போலீஸ்காரன் இவ்வாறு கைச் சாடையால் அவைகளை ஒழுங்குபடுத்திப் போகச் செய்கிருன்.

**மகன் :** சரி, இவன் நாள் முழுதும் இங்கேயே நிற்பானு ?

**தந்தை :** நாள் முழுதும் ஒரு ஆள் ஒரே இடத்தில் நின்று இவ் வேலையைச் செய்துகொண் டிருக்க முடியுமா? முடியாதல்லவா ? மூன்று மணி நேரத்திற் கொருமுறை ஆட்கள் மாற்றப்படுவார்கள்.

**மகன் :** சரி, அப்பா, ஊர்க்காவல் செய்வது போலீசாரின் வேலை என்று சொன்னீர்களே ! ஊர்க்காவல் என்பது இவ்வளவுதானு ?

**தந்தை :** ஊர்க்காவல் என்பது இதுமட்டுமா? இன்னும் எவ்வளவோ உண்டு. திருவிழாக்களிலும், வேடிக்கை நடக்கும் இடங்களிலும், சந்தைகளிலும் பெருங் கூட்டம் கூடுமல்லவா ? அப்பொழுது ஜனங்கள் இடித்து மோதிக் கொள்ளாமல் அமைதியைப் பாதுகாக்க வேண்டும் ; சமயம் பார்த்துக் கூட்டத்தில் முடிச்சவிழ்ப்பவர்களைக் கண்டுபிடிக்க வேண்டும் ! சண்டை சச்சரவுகள் செய்பவர்களைப் பிடித்துக் கொண்டு போகவேண்டும் ; கொலை செய்வோரையும்

களவாடுவோரையும் கண்டுபிடிக்க வேண்டும்; போலி நாணயம் செய்பவர்களையும், சூதாடுவோரையும் கண்டுபிடிக்க வேண்டும்; வழிநடைப் பாதைகளில் மலஜலம் கழிப்பவர்களைப் பிடிக்கவேண்டும். வழி தப்பிய குழந்தைகளைப் பாதுகாத்துச் சொந்தக்கார ரிடம் ஒப்புவிக்கவேண்டும். இராக்காலத்தில் தூங்குகிற மக்களை எச்சரித்துத் திருடர் நடமாடாமல் ஊரைப் பாதுகாக்க வேண்டும்.

**மகன்:** இத்தனை காரியங்களையும் செய்யப் போலீஸ்காரர் எவ்வளவோ பேர் வேண்டுமே!

**தந்தை:** ஆமாம். ஊரில் உள்ள ஜனத் தொகைக்குத் தகுந்தபடி போலீஸ்காரர்கள் இருப்பார் கள். சிறு ஊராய் இருந்தால் சுமார் பத்துப்பேர் இருப்பார்கள். பெரிய நகரமாக இருந்தால் நூறு பேருக்கு மேலும் இருப்பார்கள்.

**மகன்:** ஹெட்கான்ஸ்டேபிள் என்கிறார்களே, அவர் யார்?

**தந்தை:** அவரும் போலீஸ்காரர்தான். போலீஸ்காரனுக்குக் கான்ஸ்டேபிள் என்றும் பெயர் உண்டு. பல போலீஸ்காரருக்குத் தலைமையாய் உள்ள வர் ஹெட்போலீஸ் அல்லது ஹெட்கான்ஸ்டேபிள் என்று கூறப்படுவார்.

**மகன்:** சிறு கிராமங்களில் போலீஸ்காரர் இருப்பார்களோ?

**தந்தை:** ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கமாட் டார்கள். பல கிராமங்களுக்குப் பொதுவாக ஒரு

பெரிய கிராமத்தில் போலீசு ஸ்டேஷன் ஒன்று இருக்கும். போலீசு ஸ்டேஷன் என்பது போலீசார் இருக்குமிடம். அங்குள்ள போலீசார் தங்கள் பார்வைக்கு ஏற்பட்டுள்ள கிராமங்களில் ஊர்க்காவல் வேலையைச் செய்து வருவார்கள். போலீசார் தங்கள் கடமையைச் செய்வதற்கு உதவியாகக் கிராம முனிசீப்பும் அவர் சிப்பந்திகளும் வேண்டிய காரியங்களைச் செய்ய வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| சாடை | பொதுவாக | சிப்பந்தி | களவாடுவோர் |
| முடிச்சு | விதி | முச்சந்தி | ஊர்க்காவல் |
| இடித்தல் | சூதாடல் | சந்தி | மோதுதல் |
| சச்சரவு | வழிநடை | தலைமை | போலிநாணயம் |
| நடமாடுதல் | எச்சரித்தல் | நாற்சந்தி | ஒழுங்குபடுத்து. |
| நிர்வாகம் | ஜனத்தொகை | கண்டுபிடித்தல் | |

## அருஞ்பதவுரை

போலி நாணயம் - கள்ளத்தனமாகச் செய்யப்பட்ட நாணயம். எச்சரித்தல் - கவனமாக இருக்கச் செய்தல். நிர்வாகம் - ஆட்சி. சிப்பந்திகள் - கீழ் உத்தியோகஸ்தர்கள். சச்சரவு - வாய்ச்சண்டை.

## பயிற்சி

1. போலீஸ் ஸ்டேஷன் என்பதைப்பற்றி ஐந்து வாக்கியங்கள் கூறு.

2. எச்சரிக்கை, நடைபாதை, ஊர்க்காவல், ஒழுங்கு, சூது—இவ்வார்த்தைகளை வாக்கியங்களில் அமைத்துக் கூறு.

## இலக்கணம்

மெய் பேசு. இது ஒரு வாக்கியம். இதில் 'பேசு' என்பது பயனிலை. 'மெய்' என்பது செயப்படுபொருள். எழுவாய் எது? இவ்வாக்கியம் 'நீ மெய் பேசு' என்று விரியும். ஆதலால் 'நீ' என்பது எழுவாய். இவ்வெழுவாய் வெளிப்படையாகத் தோன்றாமல் மறைந்து நிற்கின்றது. ஆகையால், இது **தோன்றா எழுவாய்** எனப்படும்.

**ஒரு வாக்கியத்தில் எழுவாய் தோன்றாமல் மறைந்திருந்தால் அதற்குத் தோன்றா எழுவாய் என்று பெயர்.**

பின்வரும் வாக்கியங்களிலுள்ள தோன்றா எழுவாய்களை எடுத்துக் கூறுக.

இந்தப் போலீஸ்காரனைப் பார். ஒரு கையைத் தூக்குகிறான்; இன்னொரு கையை ஒரு பக்கமாகத் திருப்புகிறான்.

## கேள்விகள்

1. போலீஸ்காரன் என்பதற்குப் பொருள் என்ன?

2. சாலையில் நடக்கும்போது எந்தப் பக்கமாகப் போக வேண்டும்? எந்தப் பக்கமாக வரவேண்டும்?

3. போலீஸ்காரரின் வேலைகள் என்னென்ன?

# 6. அன்பின் அருஞ்செயல்

1. ஓர் ஊரை அடுத்துள்ள ஒரு காட்டில் ஒரு முனிவர் தவம் செய்துகொண்டிருந்தார். அவரைத் தரிசிக்கப் பல அன்பர்கள் வருவதுண்டு. அவர்கள் அவருக்கு உணவு கொண்டுவருவார்கள். முனிவர் தமது நிஷ்டை கலைந்தபொழுது அங்கு உணவு இருந்தால் அதனை உண்பார். ஒருவரும் உணவு கொண்டு வராவிடில் அதைப்பற்றிக் கவலைகொள்ள மாட்டார். பல நாள் உணவில்லாவிடினும் வருத்தமின்றி யிருப்பார்.

2. ஒரு நாள் முனிவரைத் தரிசிக்கவந்த ஒருவர் ஒரு வெள்ளித் தட்டை முனிவரது ஆசிரம வாயிலில் வைத்துவிட்டுச் சென்றனர். அது முதல், அவரைத் தரிசிக்க வரும் அன்பர்கள் தாம் ஏதேனும் உணவு கொண்டுவந்தால் அதனை அத்தட்டில் இட்டுச் செல்வது வழக்கம். முனிவரும் உணவையுண்டு தட்டை வெளியிலேயே வைத்துவிடுவார்.

3. மற்றொரு நாள் அவ்வழியே ஒரு திருடன் வந்தான். அப்பொழுது முனிவர் ஆசிரமத்திற்குள் தியானத்தில் இருந்தனர். வெள்ளித் தட்டு இருந்த இடத்தில் ஒருவரும் இல்லாததைக் கண்டு அவன் அதனைக் கையில் எடுத்தான். அதே சமயத்தில் முனிவர் நிஷ்டை கலைந்து வெளியே வந்தார். அவரைக் கண்ட திருடன் அஞ்சித் தட்டைக் கீழே போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தான்.

4. முனிவர் அத்தட்டைக் கையிலெடுத்துக் கொண்டு அவனைப் பின் தொடர்ந்தார். முனிவர் தன்னைப் பிடிக்க வருகிறார் என்று கருதித் திருடன் விரைவாக ஓடத்தொடங்கினான். முனிவரும் விரைந்து பின்சென்றார். இவ்வாறு இருவரும் ஒருவர் பின் ஒரு வராக நீண்ட தூரம் ஓடினர். கடைசியாக முனிவர் திருடனைப் பிடித்துவிட்டார். திருடன் 'இனி நமக்கு நிச்சயமாகத் தண்டனை கிடைக்கும்' என்று கருதி நடுங்கினான்.




5. ஆனால், முனிவர் அவனை நோக்கி, "அப்பா, அஞ்சாதே! இந்தத் தட்டை விரும்பி எடுத்த நீ ஏன் அதை அங்கேயே போட்டுவிட்டு ஓடிவந்தாய்? எனக்கு இவ்வளவு சிரமம் கொடுக்க

லாமா? நான் துறவி; எனக்கு வெள்ளித்தட்டு எதற்காக? நீயே இதனை எடுத்துக்கொள்," என்று கூறித் தட்டைக் கொடுத்தார்.

6. திருடன் முனிவர் கூறியதை நம்பாமல், "சுவாமி, நான் செய்தது பிழை; என்னை மன்னிக்க வேண்டும்; தட்டு உங்களுடையது; எனக்கு வேண்டாம்," என்று மொழிந்தான். முனிவர் மீண்டும் அவனை நோக்கி, "நான் கூறுவது உண்மை; அப்பா, எனக்கு இந்தத் தட்டினுல் ஒரு பயனுமில்லை. ஆனுல் நீ இதைக் கொண்டுபோனுல் இதை விற்று வயிறு வளர்ப்பாய். ஆதலால் நீ இத்தட்டை எடுத்துக்கொண்டுதான் போகவேண்டும்," என்று வற்புறுத்திக் கூறினுர்.

6. திருடனுக்கு அப்பொழுதுதான் முனிவர் கருத்துப் புலப்பட்டது. முனிவர் உள்ளபடியே வெள்ளித் தட்டைத் தனக்கு அன்போடு கொடுக்க எண்ணுகின்றுர் என்பதை அறிந்து ஆச்சரியமடைந்தான். திருட்டுத்தொழில் புரியும் நம்மிடத்தில் இவ்வளவு அன்புள்ளவர் மற்றவர்களிடம் எவ்வளவு அன்பு வைத்திருப்பார் என எண்ணி எண்ணிப் பெருவியப் புற்றுன். அந்தக் கணத்திலேயே அவன் மனம் மாறிவிட்டது.

7. அவன் தான் மேற்கொண்டுவந்த திருட்டுத் தொழிலை அன்றுமுதல் அறவே ஒழித்துவிட்டான். முனிவரது அன்பு அவனது தீயமனத்தைத் தூய்மையாக்கி விட்டது. அவனும் தனது ஆசையை எல்லாம்

ஒழித்து ஒரு சிறந்த துறவியானுன். இது அன்பின் அருஞ் செயல் அன்றோ ?

| | | | |
|---|---|---|---|
| அன்பர் | அறவே | மொழிந்தான் | அடுத்துள்ள |
| நிஷ்டை | புரிதல் | நிச்சயம் | பின்தொடர்தல் |
| சிரமம் | தரிசிக்க | தியானம் | அருஞ்செயல் |
| கலேதல் | நோக்கி | ஆசிரமம் | வயிறுவளர்த்தல் |
| துறவி | வற்புறுத்தி | தூய்மை | மேற்கொள்ளுதல் |
| கணம் | | | |

## அரும்பதவுரை

துறவி - சந்நியாசி. புரிதல் - செய்தல். தரிசிக்க - பார்க்க. மொழிந்தான் - சொன்னுன். தூய்மை - பரிசுத்தம். கணம் - நிமிஷம். சிரமம் - கஷ்டம். ஆசிரமம் - துறவிகளின் இருப்பிடம்.

## பயிற்சி

1. தரிசிக்க, மொழிந்தான், நோக்கி, கருதி—இவைகளைப் பெயர்ச் சொற்களாக மாற்று.

2. இரண்டு வாக்கியங்களாகப் பிரித்து எழுது :—

ஒரு நாள் முனிவரைத் தரிசிக்க வந்த ஒருவர் ஒரு வெள்ளித் தட்டை முனிவரது ஆசிரம வாயிலில் வைத்து விட்டுச் சென்றுர்.

அவனும் தனது ஆசையை எல்லாம் ஒழித்து ஒரு சிறந்த துறவியானுன்.

3. ஒரே வாக்கியமாகச் சேர்த்துப் படி :—

அவரைக் கண்ட திருடன் அஞ்சினுன். தட்டைக் கீழே போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தான்.

முனிவரும் விரைந்து பின் சென்றுர். கடைசியாகத் திருடனைப் பிடித்துவிட்டார்.

## கேள்விகள்

1. திருடன் ஏன் ஓடினுன் ?
2. முனிவர் பின்தொடர்ந்து சென்றது ஏன் ?
3. திருடன் எத்தகைய மாறுதலை அடைந்தான் ?
4. இப்பாடத்தினுல் நீ அறிந்துகொள்வது யாது ?

# 7. கடிகாரம்

**1.** நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு காலம் ஏற்பட்டிருக்கிறது. உணவு கொள்ளுதல், வேலைசெய்தல், உறங்குதல் ஆகிய இவற்றிற்கு வெவ்வேறு காலம் ஏற்பட்டிருப்பதை நீங்கள் அறிவீர்கள். குறித்த வேலையைக் குறித்த காலத்தில் செய்தலே சிறப்புடையது. அவ்வாறு செய்வதற்குக் கால அளவைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

**2.** சூரிய உதயம் முதல் அத்தமனம் வரையில் உள்ள காலம் பகல்; சூரிய அத்தமனம் முதல் மீண்டும் சூரியோதயம் ஆகும் வரையில் உள்ள காலம் இரவு. பகலும் இரவும் சேர்ந்தது ஒரு நாள். ஏழு நாள் கொண்டது ஒரு வாரம். முப்பது நாள் கொண்டது ஒரு மாதம். பன்னிரண்டு மாதம் கொண்டது ஒரு வருடம். மாதங்களில் சிலவற்றிற்கு முப்பத்தொரு நாளும் உண்டு. ஒரு மாதத்துக்கு இருபத்தெட்டு அல்லது இருபத்தொன்பது நாட்களுமுண்டு. ஒரு ஆண்டுக்கு முந்நூற்று அறுபத்தைந்து நாட்கள் ஆகும்.

**3.** நமது முன்னோர்கள் ஒரு நாளை அறுபது நாழிகைகளாகப் பிரித்திருக்கிறார்கள்; பகல் முப்பது நாழிகை; இரவு முப்பது நாழிகை. ஒரு நாழிகை அறுபது விநாடிகளாப் பிரிக்கப்பட்டுள்ளது. முற்காலத்தில் பகலில் சூரியகதியைக் கொண்டும் இரவில்

நட்சத்திரங்களின் போக்கைக் கொண்டும் ஒரு நாளில் இவ்வளவு நாழிகை கழிந்தது எனக் கணக்கிட்டனர். ஆயினும், இவ்வாறு கணக்கிடுதல் எல்லாராலும் முடியாது ; மாரிக் காலத்தில் இடைவிடாது மழை பெய்யும் பொழுது மாலை நேரத்தில் பூக்கும் பூவைக் கொண்டும் காலத்தை ஒருவாறு கணக்கிடுவார்கள். இதெல்லாம் எவ்வளவு சிரமம் பாருங்கள் ! இதனால் நாழிகை அளவைத் திட்டமாக அறிவதற்குப் பல காலங்களில் பல பல கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகள் எல்லாவற்றிலும் நாம் இப்போது பார்க்கும் கடிகாரமே மிகச் சிறந்த கருவியாகும்.

4. நாழிகைக்குக் கடிகா என்று பெயர் ; அதனால் நாழிகை அளவைக் காட்டும் கருவியைக் கடிகாரம் என்று வழங்குகிறோம். ஒரு நாளை நம் முன்னோர் அறுபது நாழிகையாகப் பிரித்திருக்கிறார்கள் ; ஆனால் மேல் நாட்டார் இருபத்துநான்கு மணிகளாகப் பிரித்திருக்கிறார்கள். பகல் பன்னிரண்டு மணி; இரவு பன்னிரண்டு மணி. ஒரு மணிக்கு அறுபது நிமிஷம் ; ஆகையால், ஒரு நாழிகைக்கு இருபத்து நான்கு நிமிஷமாகும் ; இரண்டரை நாழிகை கொண்டது ஒரு மணி ஆகும். ஒரு பகலும் இரவும் கொண்டது ஒரு நாள். ஆயினும் மேல் நாட்டார் ஒரு நாள் நள்ளிரவிலிருந்து மறுநாள் நள்ளிரவுவரை ஒரு நாளின் அளவாகக் கணிக்கிறார்கள். அதனால் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட கடிகாரத்திலும் அம்முறையிலேயே மணிக்கணக்குக் குறிக்கப்பட்டிருக்கிறது.

5. கடிகாரத்தைப் பாருங்கள். அதில் முன் பக்கத்தில் பன்னிரண்டு எண்கள் குறிக்கப்பட்டிருக் கின்றன. அவை உங்களுக்குத் தெரிந்த எண்ணை இல்லாமல் வேறு எண்ணைகவும் இருக்கும். அவற்றை **1-I; 2-II; 3-III; 4-IV; 5-V; 6-VI; 7-VII; 8-VIII; 9-IX; 10-X; 11-XI; 12-XII** என்று இவ்வாறு அறிந்து கொள்ள வேண் டும். கடிகாரத்தில் இரண்டு முட்கள் உள்ளன. அவைகளில் ஒன்று பெரிய முள்; மற்றொன்று சிறிய முள். பெரிய முள் நிமிஷம் காட்டும் முள்; சிறிய முள் மணி காட்டும் முள். பெரிய முள் ஒரு எண்ணிலிருந்து அடுத்த எண்ணுக்கு வர ஐந்து நிமிஷ நேரம் ஆகும். சிறிய முள் அவ்வாறு வர அறுபது நிமிஷம் அல்லது ஒரு மணி நேரம் ஆகும்.



ஆகையால், சிறிய முள் ஒரு எண்ணிலிருந்து மற் றொரு எண்ணுக்கு வருவதற்குள் பெரிய முள் பன்னி ரண்டு எண்களையும் ஒரு முறை கடந்துவிடும். சிறிய முள் பன்னிரண்டு எண்களையும் ஒரு முறை சுற்றி வருவதற்குள் பெரிய முள் அவைகளைப் பன்னிரண்டு முறை சுற்றி வந்துவிடும்.

6. ஒரு நாளுக்கு இருபத்து நான்கு மணி. ஆயினும் கடிகாரத்தில் குறிக்கப்பட்டிருப்பது பன்னி ரண்டு மணியே. நள்ளிரவிலிருந்து காலம் குறிக்கப்

படுவதால் சூரியோதயம் ஆகும்போது மணி ஆறு ஆகும் ; நடுப்பகலில் மணி பன்னிரண்டு ஆகும் ; சூரிய அத்தமனத்தில் மணி ஆறுகும் ; நள்ளிரவில் மணி பன்னிரண்டாகும். சிறிய முள் மணி காட்டும் ; பெரிய முள் நிமிடம் காட்டும் ; ஆகையால் நேரத்தை அறிய வேண்டுமாளுல் மணிக்குச் சிறிய முள்ளையும் நிமிடத்துக்குப் பெரிய முள்ளையும் கவனிக்க வேண்டும். ஒரு எண்ணின் மத்தியில் சிறிய முள் இருந்தால் பெரிய முள் பன்னிரண்டாவது எண்ணில் இருக்கும். அப்பொழுது சிறியமுள் எந்த எண்ணி லிருக்கிறதோ அத்தனை மணி என்று அறிய வேண்டும். சிறிய முள் தானிருக்கும் எண்ணை விட்டுச் சிறிது நகர்வதற்குள் பெரிய முள் சில எண் களைக் கடந்து விடும். சிறியமுள் மூன்ருவது எண் ணைக் கடந்தும் பெரிய முள் ஐந்தாவது எண்ணிலும் இருந்தால் அப்பொழுதைய நேரம் மூன்று மணியும் இருபத்தைந்து நிமிடமும் ஆகும். ஒரு நிமிடத் துக்கு அறுபது செக்கண்டு ; ஆகையால் கடிகாரங் களில் செக்கண்டைக் காட்டும் மிகச் சிறிய முள்ளும் இருக்கும்.

7. கடிகாரம் இக்காலத்தில் பெரும்பாலும் எல்லா வீடுகளிலும் இருக்கும். பள்ளிக்கூடங்கள், நீதி மன்றங்கள், புகைவண்டி நிலையங்கள் முதலிய இடங் களில் கடிகாரம் எப்பொழுதும் இருக்கும். சில பெரிய நகரங்களில் எல்லாரும் பார்க்கக் கூடியவாறு பெரிய தூபியின் உச்சியில் நான்கு பக்கங்களிலும் தெரியக்

கூடிய பெரிய கடிகாரம் வைக்கப்பட்டிருக்கும். அதற்கு மணிக்கூண்டு என்று பெயர். மனிதர்களுக்கு மிகவும் உபயோகப்படும் கருவிகளுள் கடிகாரம் ஒன்றல்லவா ? அதனால், அதைக் கண்டு பிடித்த பெரியாருக்கு நாம் நன்றி செலுத்துவோமாக!

| | | |
|---|---|---|
| கதி | நாழிகை | நீதி |
| மணி | விநாடி | முள் |
| நன்றி | மன்றம் | கடத்தல் |
| தூபி | சூழ்ந்து | நிமிஷம் |
| எண்கள் | நிலையம் | மாரிக்காலம் |
| சிரமம் | கணித்தல் | கால அளவை |
| கடிகா | நள்ளிரவு | நட்சத்திரம் |
| கடிகாரம் | உறங்குதல் | |

## அரும்பதவுரை

கதி - செல்லுகை, போக்கு. நள்ளிரவு - நடு ராத்திரி. நிலையம் - நிற்கும் இடம். தூபி - கோபுரம். நீதிமன்றம் - நியாய சபை, கோர்ட்டு. சிரமம் - பிரயாசை, கஷ்டம். கணித்தல் - கணக்கிடுதல்.

## பயிற்சி

உங்கள் பள்ளிக்கூடத்திலுள்ள கடிகாரத்தைப்பற்றிச் சில வாக்கியங்கள் கூறு.

## இலக்கணம்

1. மனிதர்கள், கண்ணன், சுந்தரி—இவைகள் பெயர்ச் சொற்கள். இவைகள் மனிதர்களின் பெயரைக் குறிக்கின்றன. மனிதர்களின் பெயரைக் குறிக்கும் சொற்கள் உயர்திணை எனப்படும்.

கல், மரம், பறவைகள், சூரியன்—இவைகள் மனிதரல்லாத உயிருள்ளவைகளையும் உயிரில்லாதவைகளையும் குறிக்கின்றன. இவ்வகள் அஃறிணை எனப்படும்.

திணை, உயர்திணை அஃறிணை என இருவகைப்படும்.

2. கடிகாரம், வண்டி, குதிரைகள், பையன்கள், பெண்கள், இவன், இவள், உபாத்தியாயர், புரு, பாம்பு—இச்சொற்கள் ஒவ்வொன்றும் என்ன திணை ?

## கேள்விகள்

1. முற்காலத்தில் கால அளவை எவ்வாறு கண்டறிந்தனர் ?

2. கடிகாரம் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது ?

3. மூன்றே கால் மணி, ஆறரை மணி, ஒன்பதே முக்கால் மணி—இந்நேரங்களில் கடிகாரத்தின் முட்கள் எங்கெங்கே இருக்கும் ?

# 8. பென்சில் சொல்லும் கதை




1. "காகிதத்தில் கணக்குப் போடப் பென்சில் இல்லையே, அப்பா!" என்று கேட்கிறீர்கள். உங்கள்

தந்தையார் கொடுக்கும் மூன்று அல்லது நான்கு அணுவைப் பெற்றுக்கொண்டு கடைக்கு ஓடுகிறீர்கள். விலைக்குத் தகுந்த பென்சிலை, உங்களுக்குப் பிடித்த நிறத்திலும் வடிவத்திலும், வாங்கிக் கொள்கிறீர்கள். ஒரு முனையைச் சீவி எழுதத் தொடங்குகிறீர்கள். அவ் வளவுதான். காகிதப் பென்சில்களாகிய நாங்கள் எவ் வளவு அற்புதமான பொருள்கள் என்பதைப் பற்றியா வது, எங்கெங்கு கிடைக்கும் பொருள்களை எல்லாம் சேர்த்து எங்களை உண்டாக்குகிறார்கள் என்பதைப் பற்றியாவது நீங்கள் சிந்தித்துப் பார்த்ததுண்டா? உங்கள் நாட்டில் சென்னையில் ஒரு பென்சில் தொழிற் சாலை இருப்பதையாவது கேள்விப் பட்டிருக்கிறீர் களா? மலிவான பென்சில்களைப் பற்றி உங்களுக்கு ஏது அத்துணைக் கவலை!

2. நாங்கள் மலிவாக இருந்தாலும், எங்களை அமைப்பதற்கான பொருள்கள் வெவ்வேறு கண்டங் களிலிருந்து கடல்களைக் கடந்து தொழிற்சாலை களுக்கு வருகின்றன. தெற்கு ஆப்பிரிக்காவில் கென்யா என்ற ஒரு தேசமிருக்கிறது. அங்குள்ள அடர்ந்த காடுகளில் மிருதுவான சில மரங்கள் வளர் கின்றன. அவை பென்சிலை அமைக்க ஏற்றவை. அந்த மரங்களை வெட்டி, சட்டங்களாக்கிப் பென்சில் தொழிற்சாலைகளுக்கு அனுப்புகிறார்கள். எழுத உதவும் கரிய கம்பியை அமைக்கக் கிராபைட்டு என்ற ஒருவகைக் கரியும் களிமண்ணும் தேவை. அமெரிக்காவிலும், இலங்கையிலும் இந்தக் கரி

கிடைக்கிறது. இது சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கப்படுகிறது. கிராபைட்டைத் தொட்டால் மிகவும் மெதுவான மெல்லிய தூளாகக் கையில் ஒட்டிக் கொள்ளும். இதனுடன் கலக்கத் தகுந்த களிமண் கோதாவரி நதிப் படுகையில் கிடைக்கிறது. இந்தப் பொருள்களெல்லாம் பென்சில் தொழிற் சாலேக்கு வந்து சேருகின்றன.

3. கிராபைட்டுத் தூளேயும் களி மண்ணேயும் சேர்த்துச் சிறிது நீருடன் நன்ருக அரைக்கிருர்கள். பசை போலுள்ள இந்தக் கலவையை ஒரு எந்திரத்தில் வைத்து அமுத்தி மெல்லிய உருளேக் கம்பிகளாக இழுக்கிருர்கள். கிராபைட்டு, களிமண் இவற்றின் விகிதத்துக்குத் தகுந்தபடி கம்பிகள் மிருதுவாகவோ கடினமாகவோ அமையும். கம்பிகளே உலர்த்தித் தரம் தரமாகப் பிரித்து வைக்கிருர்கள்.

4. காடி போன்ற பள்ளங்கள் உண்டாகுமாறு தகுந்த கனமுள்ள மரச்சட்டங்களே இழைத்து, வச்சிரப் பசை பூசுகிருர்கள். இவற்றில் கரிய பென்சில் 'லெட்' கம்பிகளேப் பொருத்தி ஒட்ட வைத்து, பள்ளங்களுள்ள மரச் சட்டங்களே மேலேயும் பொருத்துகிருர்கள். மரச் சட்டங்களிலுள்ள பள்ளங்கள் சமதூரத்தில் இருக்குமாதலால், இரு சட்டங்களும் கரிக்கம்பிகளேப் பிணைத்துக் கொண்டு நன்கு பொருந்திவிடும். இந்த மரச் சட்டங்களே ஒரு எந்திரத்தில் கொடுத்துத் தனித்தனிப் பென்சில்களாக அறுக்கிருர்கள். இப்பொழுது தான் பென்சில்களாகிய

எங்களுடைய வடிவம் உருண்டையாகவோ அறு கோணமாகவோ அமைகிறது. பிறகு எங்களை ஒரே அளவாக வெட்டுகிருர்கள்.

5. மற்ருெரு எந்திரத்தின் உதவியால் எங்களுக்கு நீலம், சிவப்பு, பச்சை, மஞ்சள் முதலிய வர்ணங்களைப் பூசுகிருர்கள். இப்பொழுது நாங்கள் அழகான தோற்றம் பெறுகிருேம். பிறகு வேருெரு எந்திரத்தில் எங்களைக் கொடுத்து, எங்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயரோடு, செய்யப்பட்ட தொழிற் சாலையின் பெயரை அல்லது நாட்டின் பெயரை அச்செழுத்துக்களில் பொறிக்கிருர்கள். நாங்கள் மிருதுவான பென்சில்களா, கடினமானவையா என்பது போன்ற விவரக் குறிப்புக்களும் பொறிக்கப்படுகின்றன.

6. இவ்வளவும் செய்த பிறகு, எங்களை டசன் டசனுகக் கட்டி, அழகிய அட்டைப் பெட்டிகளில் பன்னிரண்டு பன்னிரண்டு கட்டுகளாக வைக்கிருர்கள். பிறகு நாங்கள் கடைகளுக்கு அனுப்பப் படுகிருேம். கடைகளிலிருந்து நீங்கள் விலைக்கு வாங்கிக் கொள்கிறீர்கள்.

7. எங்களுடைய மதிப்பை அறியாமல் கோபத்தில் எங்களை உடைப்பதும், சீவிச் சீவிப் போடுவதும் உங்களுக்குத் தினசரி வழக்கமாயிருக்கிறது. உங்களுடைய கல்விக்கு நாங்கள் .எத்துணை உதவி புரிகிருேம் என்பதை எண்ணிப் பார்த்து, இனியேனும் எங்களிடம் சிறிது நன்றியறிதலுணர்ச்சிகாட்டுங்கள்.

| | | |
|---|---|---|
| சிந்தித்து | கிராபைட்டு | அறுகோணம் |
| மலிவு | படுகை | எத்துணை |
| அத்துணை | காடி | புரிகிறோம் |
| பொறி | விகிதம் | |

## அரும்பதவுரை

சிந்தித்து - எண்ணி. மலிவு - விலை குறைவு. விகிதம் - அளவு. காடி - கால்வாய் போன்ற பள்ளம். தோற்றம் - உருவம். பொறிக்கிறார்கள் - பதியச் செய்கிறார்கள். எத்துணை - எவ்வளவு. புரிகிறோம் - செய்கிறோம். நன்றியறிதல் - செய்த உதவியை மறவாதிருத்தல்.

## கேள்விகள்

1. பென்சில் செய்வதற்குத் தேவையான பொருள்கள் என்ன ?

2. பென்சில்களில் உள்ள கரிக்கம்பிகள் எவ்வாறு செய்யப் படுகின்றன ?

3. பென்சில்களை எந்த வடிவத்தில் அமைக்கிறார்கள் ?

4. பென்சில்களின்மீது என்ன என்ன விவரங்கள் பொறிக்கப்படுகின்றன ?



## 9. ஆமையும் முயலும்

1. ஆமையொன்று வழியில் செல்ல
அதனைக் கண்டு முயலுமே
தீமை யில்லா ஆமை யோடு
திறமும் பேச முயலுமே.

2. 'குறுந டைகொண் டென்ன செய்வாய்
குவல யத்தில் நீயுமே ;
பெருந டைகொள் என்னைப் போலப்
பெருமை கொள்ளச் சாயுமோ.'

3. என்று முயலும் கர்வம் கொள்ள
எதிர்உ ரைக்கும் ஆமைதான்
'நன்று நினது பெருமை தன்னை
நானும் காண்பேன் வாய்மைதான்.'

4. என்று சொல்ல முயல்வெ குண்டே
'என்ந டையோ டுன்னடை
ஒன்று மென்ன ஒருவரும்மே
உரையார் நீயும் பின்னடை,'

6. எனப்பு கன்ற முயலை நோக்கி
'எதற்கு வாயின் வாதமே?
தனித்த னியே நமது வலிமை
தன்னைக் காட்டல் போதுமே.

6. 'இருவ ரும்ஓர் இடத்தில் நின்றே
ஏகு வோம்ஓர் இடத்திற்கே;
மருவு கின்றோர் எவரோ முன்பு
பார்ப்போம் வெற்றி கிடைத்தற்கே.'

7. என்றே ஆமை உரைக்கக் கேட்ட
எளிய முயலும் ஓதுமே
'நன்றே, ஆயின் சான்று கூற
நரியும் நமக்குப் போதுமே.'

8. என்று கூற நின்ற நரியும்
'இதற்கோ இல்லை தடையுமே
நன்றே காட்டும் உங்கள் இருவர்
நளின பாத நடையுமே.'

9. என்று சொல்ல இரண்டும் வந்தோர்
இடத்தில் நின்று கிளம்பவே
'ஒன்றி ரண்டு மூன்'றென் றதுவும்
உரத்த குரலில் விளம்பவே.

10. பெரிய முயலும் விரைந்து சென்று
பெயர்ந்த துவே வெகுதூரம் ;
சிறிய ஆமை நகர்ந்து நகர்ந்து
சென்ற துவே சிலதூரம்.

11. ஆமை நடையென் றுலகோர் சொல்லும்
நடையை முயலும் நோக்கிற்றே ;
' தீமை அதற்கே ' என்றுரேர் புதரில்
துயின்று நேரம் போக்கிற்றே.

12. அதற்குள் ஆமை குறித்த இடத்தை
அடைந்து சிறப்பாய் நின்றதே ;
புதர்க்குள் துயின்ற முயல்வி ழித்தே
' மோசம் போனேன் !' என்றதே.

13. என்றே வருந்த நரியும் கூறும்
' ஏன்உ னக்கு வருத்தமே ;
நன்றே பெய்யும் முயற்சி யினுல்
நலமுண் டாகும் பொருத்தமே.'

—வித்வான் ம. பெரியசாமிப் பிள்ளை

| | | | |
|---|---|---|---|
| உரை | முயலும் | தடை | திறம் |
| சாயுமோ | தீமை | எதிர் | துயின்று |
| செல்ல | ஓது | வாதம் | மருவுதல் |
| சான்று | வாய்மை | குறுநடை | புகன்ற |
| ஒன்றும் | பெருநடை | ஒன்றுதல் | நளினம் |
| குவலயம் | ஏகுதல் | துயின்று | பெருமை |

## அரும்பதவுரை

திறம் - சாமர்த்தியம், வல்லமை. குவலயம் - பூமி. உரை - சொல். வாய்மை - உண்மை, நிச்சயம். மருவுதல் - போய்ச் சேர்தல். ஓது - சொல்லு. சான்று - சாட்சி. துயின்று - தூங்கி. குறுநடை - மெதுவான நடை. நளின பாதம் - மென்மையான பாதம். பெயர்ந்தது - சென்றது.

## பயிற்சி

1. இக்கதையை வசனத்தில் எழுது.

2. ஆமையும் முயலும் பேசிக்கொண்டது போல் சில வாக்கியங்கள் கூறு.

## கேள்விகள்

1. முயல் ஆமையைப் பார்த்துக் கர்வமாக என்ன சொல்லிற்று ? அதற்கு ஆமை சொல்லிய பதில் என்ன ?

2. முயலுக்கும் ஆமைக்கும் ஏற்பட்ட பந்தயம் என்ன ?

3. எது வெற்றியடைந்தது ? எப்படி ?

4. எது தோல்வியடைந்தது ? ஏன் ?

5. இக்கதையினுல் நாம் அறிந்து கொள்ளக்கூடிய உண்மை யாது ?



# 10. வீர சிதம்பரனார்

நம் நாட்டு விடுதலைப் போரில் ஈடுபட்ட தமிழ் வீரர்களில் வ. உ. சிதம்பரம் பிள்ளை ஒருவர். இவரது நாட்டுப் பற்றும் வீரமும் நமக்கெல்லாம் எடுத்துக் காட்டாக விளங்குவனவாம்.

தூத்துக்குடிக்கு அருகேயுள்ள ஓட்டப்பிடாரம் என்ற கிராமத்தில் சிதம்பரனார் பிறந்தார். உலகநாத பிள்ளையும் பிரமாயி அம்மையும் இவருடைய பெற்றோர் ஆவர்.

சிதம்பரனார் பள்ளியில் படித்து மெட்ரிக்குலேஷன் பரீட்சையில் தேறிய பிறகு வழக்கறிஞர்

தொழிலுக்காகப் படித்தார். பிறகு தூத்துக்குடியில் வழக்கறிஞர் அலுவலைச் செய்து வந்தார். இவர் அத் தொழிலை நேர்மையாகச் செய்து புகழ் பெற்றார். தொழில் செய்யும் பொழுதே, இவர் சிறந்த தமிழ் நூல்களைக் கற்றுத் தமிழில் நல்ல புலமை பெற்றார்.

திலகரும், காந்தியடிகளும் நம் நாட்டு விடுதலைப் போருக்குத் தலைமை தாங்கி நடத்திய காலங்களில் சிதம்பரனார் அந்த இயக்கத்தில் முழுமனத்துடன் சேர்ந்து கொண்டார். தமிழ் நாட்டில் பல கூட்டங் களில் பேசி மக்களின் உள்ளத்தில் நாட்டுப் பற்றைத் தோற்றுவித்தார்.

ஆங்கிலேயர் நம் நாட்டை ஆண்ட காலத்தில், நம் நாட்டின் கப்பல் வியாபாரமெல்லாம் அவர்க ளுடைய ஆதிக்கத்தில் இருந்தது. இதைக் கண்ட சிதம்பரனாரின் மனம் கொதித்தது. பண்டைத் தமிழர் கப்பல்களில் சென்று அயல் நாடுகளுடன் வியாபாரம் செய்தார்கள் ; அவர்களைப் போலவே சிதம்பரனார் தாமும் செய்ய ஆவல் கொண்டார். சில நண்பர் களுடைய உதவியுடன் இவர் தாமே ஒரு கப்பல் கம்பனி அமைத்து, கப்பல் வாங்கி ஓட்டிச் சிலகாலம் வியாபாரம் செய்தார். ஆங்கில அரசாங்கத்தாரின் எதிர்ப்பினால், அந்த முயற்சி கடைசியில் தோல்வி யுற்றது.

விடுதலைப் போரில் இவர் தீவிரமாக ஈடுபட்டதால், அரசாங்கத்தார் இவரைச் சிறை செய்தனர். சிறை யில், இவர் கடுமையாக நடத்தப்பட்டார். ஆயினும்

இவருடைய நாட்டுப் பற்று, எவ்விதத் துன்பங் களையும் பொறுத்துக் கொள்ளும் சக்தியை இவருக்கு அளித்தது. 1872-ம் ஆண்டில் பிறந்த சிதம்பரனார் 1936-ம் ஆண்டு இவ்வுலக வாழ்வை நீத்தார்.

ஆங்கிலேயருக்கு எதிராகக் கப்பல் கம்பனி நடத்திய இவருடைய வீரமும், நாட்டின் விடுதலைக் காக எல்லாத் துன்பங்களையும் ஏற்றுக்கொண்ட இவருடைய பொறுமையும் நாம் என்றும் மறக்க முடியாதவை.

| | | |
|---|---|---|
| நாட்டுப்பற்று | வழக்கறிஞர் | நீத்தார் |
| எடுத்துக் காட்டு | தோற்றுவி | கடுமையாக |
| மெட்ரிக்குலேஷன் | ஆதிக்கம் | கம்பனி |

## அரும்பதவுரை

நாட்டுப் பற்று - தேச பக்தி. எடுத்துக் காட்டு - உதா ரணம். வழக்கறிஞர் - வக்கீல். புலமை - அறிவு. ஆதிக்கம் - அதிகாரம். ஆவல் - ஆசை. கம்பனி - வியாபாரச் சங்கம். கடுமையாக - இரக்கமில்லாமல்.

## கேள்விகள்

1. வீர சிதம்பரனாரின் பெற்றோர் யாவர்? இவர் பிறந்த ஊர் எது?
2. சிதம்பரனார் பள்ளிப் படிப்புக்குப் பிறகு என்ன தொழில் செய்யத் தொடங்கினார்?
3. சிதம்பரனாருக்கு நாட்டுப் பற்று ஏற்படக் காரணமா யிருந்தோர் யாவர்?
4. சிதம்பரனார் ஆங்கிலக் கம்பனிக்கு எதிராக வியாபாரக் கப்பல் ஓட்டிய வரலாற்றைப் பற்றி நான்கு வாக்கியங்கள் எழுது.
5. நம் நாட்டு விடுதலைப் போரில் சிதம்பரனார் ஈடு பட்டதைப் பற்றி நான்கு வாக்கியங்கள் எழுது.

# 11. தென்னை வருக்கம்

1. மரம் செடி கொடிகள் பெரும்பாலும் கிளைகள் உடையவை. ஆனால் மரங்களில் சிலவற்றிற்குக் கிளைகள் இல்லை. அவைகள்தான் தென்னை, பனை, கமுகு, ஈந்து என்பவை. ஈந்து என்பது ஈச்சமரம்; கமுகு என்பது பாக்குமரம். இந்த நான்கு வகையான மரங்களும் தூண்கள் போல வளரக்கூடியவை. ஆதலின், இவைகள் ஒரே இனத்தைச் சேர்ந்தவை.

2. தேங்காய், நுங்கு, பாக்கு, ஈச்சம்பழம் இந்த நான்கு பொருள்களையும் நீங்கள் தின்றிருப்பீர்கள். இந் நான்கு பொருள்களும் முறையே தென்னை, பனை, கமுகு, ஈந்து இம்மரங்களினின்று கிடைப்பவை.

3. இவற்றுள், தென்னை நீர் வளமுள்ள இடங்களில் நன்கு வளரும். ஆற்றோரங்களிலும் நன்செய் நிலங்களை அடுத்தும் தென்னந் தோப்புகள் இருப்பதைக் காணலாம். மரமடர்ந்த தென்னஞ் சோலைகள் காட்சிக் கினிமையாக இருக்கும். தென்னை நெற்றுக் களிலிருந்து தென்னம் பிள்ளைகள் உண்டாகும். தென்னம் பிள்ளை வளர்ந்து மரமாகும். தென்னம் பிள்ளைகளைச் சிறிது சிரமப்பட்டு வளர்த்து மரமாக்கி விட்டால் அவை மிகுந்த பயனைத் தரும். மரமாக வளர்ந்த பின்னர் அதிகக் கவனம் செலுத்த வேண்டுவதில்லை. தென்ன மரத்தில் காய் முதல் ஈர்க்கு வரையில் எல்லாப் பாகங்களும் மனிதருக்குப் பயன்

படும். மனிதருக்குப் பயன்படாத பாகம் தென்னையில் யாதுமில்லை. இலங்கை, மலையாளம் முதலிய இடங்களில் தென்னமரங்கள் மிகுதியாக வளர்கின்றன.



தென்னைமரம்



பனைமரம்

4. பனைமரம் வளர்வதற்கு மிகுந்த நீர்வளமுள்ள பூமி வேண்டுவதில்லை. தென்னையை வளர்ப்பதுபோல் மிகுந்த கவனத்துடனும் அதை வளர்க்க வேண்டுவதில்லை. மேட்டுப் பாங்கான இடங்களிலும் சிறிது மணற்பாங்கான இடங்களிலும் குழிகள் தோண்டிப் பனங்கொட்டைகளைப் போட்டுவிட்டால் அவை தாமே வளரும். பனைமரத்தினின்று நுங்கும் இனிய பதநீரும் நமக்குக் கிடைக்கின்றன. வீடு

வேயப் பனையோலை உதவும். முற்காலத்தில் பனை யோலைகளில் தான் பெரிய பெரிய நூல்களெல்லாம் எழுதப்பட்டன. அவற்றிற்கு ஏட்டுச் சுவடி என்று பெயர். பனைமரம் மிகவும் அழுத்தமானது. ஆதலின், கட்டட வேலைகளுக்கு உதவும்.

5. கமுகமரம் வளர்வதற்கு மிகுந்த நீர்வளமும் செழுமையும் உள்ள பூமிவேண்டும். பாக்கு நெற்றுக் களைப் பாத்தியில் விதைத்து நாற் றுக்களாக்கிப் பிடுங்கிப் பின்பு வேறு இடங்களில் நடுவார்கள். கமுகங் கன்றுகளை மிகவும் போற்றி வளர்க்க வேண்டும். கமுகு வளர்வதற்கு மிகுந்த நீர் வேண்டும். அதனல் தான் மழை மிகுதியாகப் பெய்யும் மலையாளம், திருவாங்கூர் முதலிய இடங்களில் கமுகமரங்கள் ஏராள மாகப் பயிராகின்றன. கமுக மரத்தி னின்று நமக்குக் கிடைக்கும் உப யோகமான பொருள் பாக்கே. பாக்கு, கொட்டைகளாகவும் சிறு சிறு துண்டுகளாகவும் விற்கப்படுகிறது; பாக்கை மெல்லிய துண்டுகளாகச் சீவி விற்பதும் உண்டு. கொட்டையாக உள்ளது கொட்டைப்பாக்கு என்றும் சீவிய துண்டுகள் சீவல் என்றும் பெயர் பெறும்.



கமுகமரம்

6. ஈந்து, பனைமரம் போலவே நீர்வளம் மிகுதி

யாக இல்லாத பூமியிலும் நன்கு வளரும். நமது நாட்டில் சிற்சில இடங்களில் ஈச்சமரத்தைக் காண லாம். ஆயினும், அரேபியா முதலிய இடங்களிலுள்ள பாலைவனங்களில் 'ஓயஸிஸ்' என்னும் நீர் நிலைகளைச் சுற்றி ஈச்சமரங்கள் மிகுதியாக வளர்ந்திருக்கும். ஈச்சமரத்தி லிருந்து நமக்கு ஈச்சம்பழம் கிடைக்கிறது. நமது நாட்டில் உள்ள ஈந்தின் பழம் சிறியது. அரேபியா, பாரசீகம் முதலிய இடங்களில் உள்ள ஈந்தின் பழங் கள் பெரியவையாக இருக்கும். ஆதலால், அவற்றிற்குப் பேரீச்சம் பழம் என்று பெயர். கடைகளில் நாம் வாங்கும் பேரீச்சம்பழம் மிக இனிமையாக இருப்பதை நீங் கள் சுவைத்து அறிந்திருப்பீர்கள்.



ஈச்சமரம்

அது தேன்கலந்து பதம் செய்யப்பட்டது. அராபியர் கள் பேரீச்சம் பழத்தை உணவாகக் கொள்ளுகிருர் கள். ஈந்தின் ஓலை மிகச் சிறியது. அதனுல் ஒரு வகைப் பாய் பின்னுகிருர்கள். அதற்கு ஈச்சம்பாய் என்று பெயர்.

7. தென்னை வருக்கமாக உள்ள நால்வகை மரங்களில் கமுகுக்கு மிகவும் பாடுபட வேண்டும். கமுகுக்கு வேண்டுவதுபோல அவ்வளவு கவனம் தென்னைக்கு வேண்டுவதில்லை. ஆயினும், பிள்ளை மர

மாகும் வரையில் அதனையும் சிறிது போற்றி வளர்க்க வேண்டும். பனைக்கு அது முளைக்கிறவரையில் கவனம் செலுத்தினால் போதும். ஈந்துக்கு நமது கவனமே வேண்டுவதில்லை; தானாகவே வளரும். எனினும், இந் நால்வகை மரங்களும் மனிதருக்கு மிகுந்த பயன் தருகின்றவை.

8. இவற்றுள் நமது நாட்டிலேயே வளர்ந்து மக்களுக்குப் பயன் தரும் மரங்கள் மூன்று; அவை பனை, தென்னை, கமுகு என்பன. இவற்றுள் பனை, மக்களின் மிகுந்த முயற்சியில்லாமலே பயன் தரும்; தென்னை சிறிது முயற்சி செய்தால்தான் பயன்தரும்; கமுகு பயன்தர மிகுந்த முயற்சி வேண்டும். இதனால், இவை மூன்றும் உத்தமர், மத்திமர், அதமர் இவர்கள் ஈகைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

உத்தமர் தாம் ஈயுமிடத் தோங்குபனை போல்வாரே;
மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே;—முத்தலரும்
ஆங்கமுகு போல்வார் அதமர்; அவர்களே
தேங்கதலி யும் போல்வார் தேர்ந்து.

| | | |
|---|---|---|
| சீவல் | வருக்கம் | கவனம் |
| கமுகு | நெற்று | நீர்நிலை |
| நுங்கு | ஏராளம் | மானுவர் |
| பதநீர் | உத்தமர் | பாலைவனம் |
| ஈந்து | அதமர் | பெரும்பாலும் |
| தோப்பு | மத்திமர் | காட்சிக்கினிமை |

## அரும்பதவுரை

வருக்கம் - இனம், வகை. ஏராளமாக - மிகுதியாக. கமுக மரம் - பாக்கு மரம். உத்தமர் - மிகச்சிறந்தவர். அதமர் - மிகவும்

கீழானவர். மத்திமர் - நடுத்தரமானவர். உத்தமம், மத்திமம், அதமம் - தலை, இடை, கடை. பாலைவனம் - நீரும் நிழலுமற்ற மணல்வெளி. மானுவர் - ஒத்திருப்பார்.

## பயிற்சி

1. நூல்கள், காட்சிக் கினிமையாக, வேய, பதம்—இச் சொற்களைப் பின்வரும் வாக்கியங்களில் ஏற்றவாறு சேர்த்துப் படி.

(1) பனையோலை, வீடு —— உதவும்.

(2) தென்னஞ் சோலைகள் —— இருக்கும்.

(3) ஈச்சம்பழங்களைத் தேன் கலந்து —— செய்வார்கள்.

(4) முற்காலத்தில் பனையோலைகளில் —— எழுதப்பட்டன.

2. தென்னை, பனை முதலியன ஒரே இனத்தைச் சேர்ந்த மரங்கள்.

ஒரே இனத்தைச் சேர்ந்த இரண்டு மிருகங்களும், இரண்டு பறவைகளும் சொல்லு.

## கேள்விகள்

1. தென்னை வருக்கத்தைச் சேர்ந்த மற்ற மரங்கள் எவை? அவைகளை ஒரே இனமாகக் கூறுவது ஏன்?

2. இந்நால்வகை மரங்களில் மிகுந்த கவனமாக வளர்க்கப் படவேண்டியது எது? மக்களின் கவனமே இல்லாமல் வளரக் கூடியது எது?

3. உத்தமர் ஈகைக்கு உவமையாவது எது? ஏன்?



# 12. மயில்

**1.** பறவைகளுள் மிக்க அழகுள்ளவை மயிலும் கிளியும் ஆகும். இவற்றுள் மயில் கிளியைவிட அழகிற் சிறந்தது. மயிலுக்கு மிகுந்த அழகைக் கொடுப்பது எது? அதன் தோகையே.

**2.** மயில் கோழியை விடப் பல மடங்கு பெரியது. அதற்கு நீண்ட உறுதியான கால்களும் பெரிய இறக்கைகளும் நீண்ட கழுத்தும் உண்டு. அதன் அலகுகள் மிக உறுதியானவை. ஆண் மயிலுக்குத் தலையில் கொண்டையும் வாலில் நீண்ட தோகையும் உண்டு. தோகை என்பது வால் இறகுகளால் ஆனது. உங்களில் சிலர் காகிதத்தால் பல மடிப்புகளுடன் செய்யப்பட்ட விசிறியைப் பார்த்திருப்பீர்கள். இவ் விசிறியை வேண்டும்போது விரிக்கலாம்;

வேண்டாதபோது சுருக்கிவிடலாம். மயிலின் தோகையும் இவ்விசிறியைப்போல் விரிக்கவும் சுருக்கவும் கூடியது.

3. மேகத்தைக் கண்டால் மயில் தன் தோகையை விரித்து ஆடும். ஏன் அவ்வாறு ஆடுகிறது? மேகம் ஆகாயத்தில் தோன்றும்போது காற்றுக் குளிர்ந்து விடும். குளிர் காற்று மயிலுக்கு மிகுந்த மகிழ்ச்சியைத் தரும். அதனால்தான் மயில் மேகத்தைக் கண்டதும் மிக மகிழ்ந்து தோகையை விரித்து ஆடுகிறது. மகிழ்ச்சி உண்டானால் சில வேளைகளில் நீங்களும் ஆடுவீர்களல்லவா? மயில் தன் தோகையை விரித்து ஆடும்போது மிக அழகாகத் தோன்றும். அதற்கு அழகைக் கொடுப்பவை தோகையில் உள்ள கண்களும் பீலிகளும் ஆகும். கண்கள் என்றால் பார்க்கக்கூடிய கண்களல்ல; கண்கள் போன்ற உருவம் உடைய புள்ளிகள். தோகையில் பல கண்கள் இருக்கும். இக் கண்கள் பல அழகிய நிறங்கள் உடையவை. மயில் இறகில் உள்ள பீலிகள் பசுமையும் நீலமும் கலந்த மினுமினுப்பான நிறமுடையவை. ஆகையால்தான் மயில் இவ்வளவு அழகாகத் தோன்றுகிறது.

4. மயிலின் உணவு பூச்சி புழுக்களும் இறைச்சியும் ஆகும். மயில் வளர்ப்பவர்கள் தவிட்டையும் அதற்கு ஆகாரமாக வைக்கிறார்கள். காட்டில் மயில்கள் பெரிய மரக்கிளைகளில் வசிக்கும். பெண் மயில் முட்டையிட்டுக் குஞ்சு பொறிக்கும். மயிற்குஞ்சு

களில் முதலில் பொறித்த ஆண் குஞ்சுக்கே சிறந்த அழகான தோகை உண்டாகும் என்று கூறுகின்றனர். மயிலின் உடம்பு மிகவும் கனமுள்ளது. ஆதலால், அது தனது கனத்த உடலைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்தில் பறக்க இயலாது; எனினும், பூமியிலிருந்து மரக்கிளைக்கும் ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்குமாகச் சிறிது தூரம் பறந்து செல்லும்.

5. மயில் நாகப் பாம்பைக் கண்டால் எளிதில் விடாது. அதைக் கொத்திக் கொன்று விட்டுத்தான் மறுவேலை பார்க்கும்; நாகமும் தன்னைப்போல ஆடுகிறது என்று பொறாமை கொண்டே இவ்வண்ணம் செய்கிறது போலும். மயில் முப்பது ஆண்டுகள் வரை உயிரோடு வாழும்.

6. மயிலை அதன் அழகுக்காகச் சிலர் வளர்க்கிறார்கள். மயில் அழகிற் சிறந்தது. காட்டில் வாழும் வேடர்கள் மயில்களைப் பிடித்து அதன் தோகை இறகுகளைப் பிடுங்கி ஒன்று சேர்த்து நாட்டிற்குக் கொண்டுவந்து விற்கிறார்கள். மயிற்றோகை அழகாக இருப்பதால் அதிக விலை கொடுத்தும் மக்கள் அதை வாங்குகிறார்கள். மயில் தோகையால் அழகிய விசிறி செய்வது உண்டு. மயில் இறகை வலிந்து பிடுங்குவதுபற்றி ஒரு பழமொழியும் வழங்குகிறது. அது "மயிலே, மயிலே, இறகுபோடு என்றால் போடுமா?" என்பது. மயிலின் இறைச்சியையும் சிலர் தின்கிறார்கள்.

7. மயில் வெப்பமான தேசங்களில் வசிக்கும். நமது இந்திய நாட்டின் தென் பகுதி மிகவும் வெப்பமானது. இத் தென் பகுதியே தமிழ் நாடாகும். தமிழ் நாட்டில் மயில்கள் மிகுதியாக உண்டு. தமிழ் நாட்டிலிருந்து பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயே மயிலும் மயில் தோகையும் வேறு நாடுகளுக்குக் கொண்டு போகப்பட்டன.

8. வான்கோழி என்ற ஒருவகைக் கோழி உண்டு. அதுவும் தன் வால் இறகுகளை விரித்தாடும். ஆயினும், அதன் இறகுகள் விகாரமானவை; மயிலின் தோகையைப்போல் அழகுடையவை அல்ல. அதனுல் வான்கோழி இறகை விரித்தாடினுலும் அழகாகத் தோன்ருதல்லவா? ஆகையால், இச்செய்தி, நன்ருகப் படிக்காதவன் படித்தவன்போல் பாவனை பண்ணுவதற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி**
**தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்**
**பொல்லாச் சிறகை விரித் தாடினுற் போலுமே**
**கல்லாதான் கற்ற கவி.**

| | | |
|---|---|---|
| பீலி | பகுதி | விரித்தல் |
| தவிடு | கானம் | பொறித்தல் |
| வேட்டர் | போலும் | மறுவேலை |
| தோகை | பொருமை | வான்கோழி |
| வலிந்து | படிப்பு | இவ்வண்ணம் |
| பொல்லா | பாவனை | மினுமினுப்பு |

## அரும்பதவுரை

உவமை - ஒப்பு. வலிந்து - பலங்கொண்டு. கானம் - காடு. பொல்லாச் சிறகு - அழகில்லாத சிறகு.

## பயிற்சி

1. இயலும்; இயலாது. முடியும்; முடியாது. தெரியும்; தெரியாது. உண்டு; இல்லை—என்று முடியும்படியாக ஒவ்வொரு வாக்கியம் எழுது.

2. 'போல' 'விட' என்ற சொற்கள் இடையில் வரும்படி மும்மூன்று வாக்கியங்கள் கூறு.

(உ - ம்.) கோழி மயிலைப்போல் அவ்வளவு பெரியது அல்ல. மயில் கோழியை விட உருவத்தில் பெரியது.

3. மயிலைப்பற்றி ஒரு கட்டுரை எழுது.

## கேள்விகள்

1. தோகை என்பது என்ன?

2. மயில், மேகத்தைக் கண்டால் தோகையை விரித்து ஆடுவதற்குக் காரணம் என்ன?

3. மயிலினால் என்ன உபயோகம்?

4. தமிழ் நாட்டில் மயில் மிகுதியாகக் காணப்படுவது ஏன்?

5. மயில் சம்பந்தமாக வழங்கும் பழமொழி யாது?

# 13. தபால்வழியே பணம் அனுப்புதல்

[உரையாடல்]

**இராமன் :** மாமா, இதோ தபால்காரன் வந்திருக்கிறுன்; உங்களுக்கு ஏதோ மணியார்டர் வந்திருக்கிறதாம்.

**மாமன் :** சரி; அவனே உள்ளே வரச்சொல்லு.

[இராமன் தபாற்காரனே உள்ளே வரச் சொல்கிறுன். அவன் உள்ளே வந்து இராமனுடைய மாமனிடம் பணத்தைக் கொடுத்து மணியார்டர் பாரத்தில் கையெழுத்து வாங்கிக் கொண்டு பாரத்தின் ஒரு பகுதியைக் கிழித்துக் கொடுத்துவிட்டுச் செல்கிறுன்.]

**இராமன் :** மாமா, பணம் எங்கிருந்து வந்தது?

**மாமன் :** இராமு, டில்லியிலிருந்து உனது அம்மாஞ்சி (அம்மான் சேய்) கந்தசாமி நூறு ரூபாய் அனுப்பியிருக்கிறுன்.

**இராமன் :** அம்மாஞ்சி யாரிடம் கொடுத்தனுப்பிஞர்? தபால்காரனிடமா? தபாற்காரன் இந்த ஊர்க் காரனுச்சே!

**மாமன் :** இராமு, கந்தசாமி பணத்தை யாரிடமும் கொடுத்தனுப்பவில்லே; பணம் அனுப்புவதற்கென ஒரு பாரம் உண்டு. அதற்கு மணியார்டர் பாரம் என்று பெயர். அந்தப் பாரத்தில் தன் விலாசமும் என் விலாசமும் எழுதிப் பணம் இவ்வளவு எனக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்றும் குறிப்பிட்டு அதை டில்லித் தபாலாபீசில் கொடுத்திருப்பான்;

பணத்தையும் தபாலாபீசில் கட்டியிருப்பான். அதற்குத் தான் மணி ஆர்டர் என்று பெயர். ஆங் கிலத்தில் 'மணி' என்ருல் பணம் என்று அர்த்தம். 'ஆர்டர்' என்ருல் இன்னுருக்குக் கொடு என்று கூறு தல். அதனுல்தான் தபாற்காரன் மணியார்டர் வந் திருக்கிறது என்ருன்.

**இராமன் :** சரிதான் மாமா, இப்பொழுது தான் 'மணியார்டர்' என்பதற்குப் பொருள் தெரிந்தது. ஆனுல், அம்மாஞ்சி டில்லியில் தானே பணத்தைக் கொடுத்திருப்பார். அதை அங்கிருந்து நமது ஊருக்குக் கொண்டு வந்தது யார் ?

**மாமன் :** டில்லியிலிருந்து பணத்தை நமது ஊருக்கு ஒருவரும் கொண்டுவரவில்லை. கந்தசாமி மணியார்டர் பாரத்தில் எழுத வேண்டியவற்றை எழுதி டில்லித் தபாலாபீசில் கொடுத்திருப்பான் என்று நான் முன்னே சொன்னேன் அல்லவா ? அந்தப் பாரம் இந்த ஊர்த் தபாலாபீசுக்கு வந்திருக் கும். தபாலாபீசு தலைவர் அதில் கண்ட தொகையைத் தபால்காரனிடம் கொடுத்தனுப்பியிருக்கிருர்.

**இராமன் :** இந்த ஊர்த் தபாலாபீசில் பணம் ஏது ? டில்லியில் கொடுத்த பணம் இங்கு வந்தால் தானே இவர் பணம் கொடுக்க முடியும் ?

**மாமன் :** இராமா ! அப்படியல்ல ; தபாலாபீசுகள் எல்லாம் சர்க்காருடையவைதானே. அந்தந்தத் தபாலாபீசில் பணம் அனுப்புவோர் கட்டும் பணம் அங்கங்கேயே இருக்கும். இன்னும் தபாலாபீசில்

சர்க்கார் பணமும் இருக்கும். மணியார்டர் பாரத்தில் உள்ளபடி பணத்தைக் கொடுக்க வேண்டியவர்களுக்குக் கொடுத்துவிட்டுக் கணக்கு வைத்துக் கொள்ளுவார்கள்.

**இராமன் :** சரிதான் மாமா, இப்பொழுதுதான் எனக்கு இது தெரிந்தது. நீங்கள் பாரத்தில் என்னவோ எழுதினீர்களே அது என்ன?

**மாமன் :** நான் பணம் பெற்றுக்கொண்டதற்கு அடையாளமாகக் கையெழுத்துப் போட்டேன். ஒரு கையெழுத்து அல்ல; இரண்டு கையெழுத்துப் போட்டேன். ஒன்றைத் தபாலாபீசில் வைத்துக் கொள்வார்கள். மற்ருென்றைப் பணம் அனுப்பியவருக்குத் திருப்பி அனுப்பிவிடுவார்கள். அதைப் பார்த்து அவர் 'பணம் நாம் அனுப்பியவருக்குப் போய்ச் சேர்ந்து விட்டது' என்று தெரிந்துகொள்வார்.

**இராமன் :** இது சரி, மாமா; அவன் அந்தப் பாரத்திலிருந்து ஒரு பாகத்தைக் கிழித்துக் கொடுத்தானே; ஏன்?

**மாமன் :** அதில் பணம் அனுப்பியவர் பணம் பெறுவோருக்கு ஏதேனும் செய்தி எழுதியிருப்பார். அதைத் தபாற்காரன் கிழித்துக் கொடுத்துவிட வேண்டும். இதற்கு ஆங்கிலத்தில் 'கூப்பன்' என்று பெயர்.

**இராமன் :** அப்படியானுல், மணியார்டர் பாரம் எந்தத் தபாலாபீசிலிருந்து வந்ததோ அங்கு அது முழுதாய்ப் போய்ச் சேராதே!

**மாமன் :** சேராது ; அந்தப் பாரம் மூன்று பகுதியாகக் கிழிக்கப்படும். ஒரு பகுதியைத் தபால் காரனே கிழித்துப் பணம் பெற்றுக் கொள்பவரிடம் கொடுப்பான். அதுதான் கூப்பன் என்று நான் முன்னே சொன்னது. இன்னொரு பகுதியைத் தபாலா பீசார் கிழித்துப் பணம் அனுப்பியவருக்குத் திருப்பி விடுவார்கள். இதில் பணம் பெற்றுக் கொண்டவர் கையெழுத்து இருக்கும். இதற்குப் பற்றுச்சீட்டு என்று பெயர். ஆங்கிலத்தில் இது 'அக்நாலெட்ஜ் மெண்ட்' என்று கூறப்படும். மற்றொரு பகுதியைத் தபாலாபீசிலேயே வைத்துக் கொள்வார்கள். இதிலும் பணம் பெற்றுக் கொண்டவர் கையெழுத்து இருக்கும்.

**இராமன் :** சரி மாமா, தபாலாபீசார் இத்தனை காரியமும் சும்மாவா செய்கிறார்கள் ?

**மாமன் :** சும்மா செய்வார்களா? தபாலாபீசில் எத்தனை உத்தியோகஸ்தர்கள் இருக்கிறார்கள் ? அவர்களுக்கெல்லாம் சம்பளம் கொடுக்க வேண்டாமா? அதற்காகப் பணம் அனுப்புகிறவர்கள் கூலி கொடுக்க வேண்டும். அதற்கு 'மணியார்டர் கமிஷன்' என்று பெயர். இவ்வளவு தொகைக்கு இவ்வளவு கூலி என்று கணக்கு உண்டு. அந்தக் கணக்கின்படி, பணம் கட்டும் போதே கூலியையும் கொடுத்துவிட வேண்டும்.

| | | |
|---|---|---|
| கையெழுத்து | சும்மா | தொகை |
| பற்றுச்சீட்டு | ஏதோ | அர்த்தம் |
| அம்மான்சேய் | விவரம் | கட்டுதல் |
| அடையாளம் | உட்பட்டு | உத்தியோகஸ்தர் |

## அரும்பதவுரை

உத்தியோகம் - வேலை. உத்தியோகஸ்தர் - வேலை செய்கிறவர். சும்மா - ஒன்றுமில்லாமல். உட்பட்டு - அடங்கி, குறைவாக. அம்மான்சேய் - மாமன் மகன்.

## பயிற்சி

பொருத்தமாகச் சேர்த்துப் படி.

| | | |
|---|---|---|
| 1. | தபாலாபீசுகள் | கமிஷன் உண்டு. |
| 2. | கூப்பனில் ஏதேனும் | ரூபாய் மணியார்டர் செய்தார். |
| 3. | மணியார்டருக்கு | சர்க்காரைச் சேர்ந்தவை. |
| 4. | மாமா எனக்கு நூறு | செய்திகள் எழுதலாம். |

## இலக்கணம்

1. ஒருமை பன்மைச் சொற்களைப்பற்றி முன் புத்தகத்தில் படித்திருக்கிறீர்கள். எண்கள் ஒருமை, பன்மை என இரண்டு வகைப்படும். ஒன்றைக் குறிப்பது ஒருமை. பலவற்றைக் குறிப்பது பன்மை.

2. நான் ஓடுகிறேன். நாங்கள் ஓடுகிறோம். நீ ஓடுகிறாய். நீங்கள் ஓடுகிறீர்கள். நாம் நம்மைக் குறித்துப் பேசும்போது 'நான்' அல்லது 'நாங்கள்' என்று சொல்லுகிறோம். முன்னால் நிற்பவரைச் சுட்டிப் பேசும்போது 'நீ' அல்லது 'நீங்கள்' என்று சொல்லுகிறோம்.

நான், நாம், நாங்கள் என்பன தன்மை இடம்.

நீ, நீர், நீங்கள் என்பன முன்னிலை இடம்.

மற்ற எல்லாச் சொற்களும் படர்க்கை இடம்.

தன்மை, முன்னிலை, படர்க்கை என இடம் மூன்று வகைப் படும்.

3. பின் வரும் பெயர்ச் சொற்களுக்குத் திணை, பால், எண், இடம் கூறுக.

| பெயர்ச்சொற்கள் | திணை | பால் | எண் | இடம் |
|---|---|---|---|---|
| தபாற்காரன் | | | | |
| பென்சில் | | | | |
| கம்பிகள் | | | | |
| மனிதர்கள் | | | | |
| செடிகள் | | | | |
| பெண்கள் | | | | |
| கந்தன் | | | | |
| வள்ளி | | | | |

## கேள்விகள்

1. மணியார்டர் என்பதற்குப் பொருள் என்ன? கூப்பன் என்றால் என்ன?

2. மணியார்டர் பண்ணவேண்டுமானால் நாம் என்ன செய்யவேண்டும்?

3. நாம் ஒருவருக்கு மணியார்டர் மூலமாக அனுப்பும் பணம் அவருக்கு எப்படிப் போய்ச் சேருகிறது?

# 14. காகிதம்

1. பிள்ளைகளே, நீங்கள் படிக்கும் புத்தகம் எதனுல் செய்யப்பட்டது? காகிதத்திலுல் அல்லவா? ஆனுல், வெறும் காகிதம் மட்டும் புத்தகம் ஆகுமா? காகிதத்தில் எழுத்துக்கள் அச்சடிக்கப் பட்டிருக்கின்றன. அதனேடு மேலே கெட்டியான அட்டை போட்டுத் தைக்கப்பட்டும் இருக்கிறது. இப்புத்தகங்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன, பாருங்கள்!

2. முற்காலத்தில் உங்களைப்போல் படித்தவர்களுக்கும் இம்மாதிரியான புத்தகங்கள் இருந்திருக்கும் என்று நீங்கள் நினைப்பீர்கள். முற்காலத்தில் படித்தவர்களுக்கு இத்தகைய புத்தகம் இல்லை. ஏன்? அக்காலத்தில் காகிதமும் இல்லை; அச்சும் இல்லை. ஆனுல் அவர்கள் எப்படிப் படித்தார்கள்? காய்ந்த பனையோலைகளில் எழுதப்பட்ட பாடங்களைப் படித்தார்கள். அப் பனையோலைகள் சுமார் ஒரு அடி நீளம் உள்ளவையாக நறுக்கப்பட்டிருக்கும். அவ்வாறு நறுக்கப்பட்ட ஓலைக்கு ஏடு என்று பெயர். அவ்வேடுகளில் கயிறு நுழையும்படி துவாரம் செய்யப்பட்டிருக்கும். கயிற்றில் எல்லா ஏடுகளையும் கோத்து ஒழுங்குபடுத்திக் கட்டிவிடலாம். இதற்கு ஓலைச்சுவடி அல்லது ஏட்டுச்சுவடி என்று பெயர். ஓலையில் நீளமான ஆணியினுல் எழுதுவார்கள். அதற்கு எழுத்தாணி என்று பெயர்.

3. நீங்கள் காகிதத்தில் எவ்வளவு சுலபமாக எழுதுகிறீர்கள்! இவ்வளவு எளிதாக ஓலையில் எழுத முடியுமா? ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுத வேண்டும். அவ்வாறு எழுத மிகுந்த பழக்கம் வேண்டும். ஓலையில் நன்ருக எழுதக் கூடியவர்கள் மிகச் சிலரே இருப்பர். ஆதலால், ஓலைச்சுவடியை இப்பொழுது நீங்கள் புத்தகம் விலைக்கு வாங்குவது போல அவ்வளவு எளிதாக வாங்க இயலாது. இக் காலத்தில் காகிதத்தால் ஆக்கப்பட்ட புத்தகத்தை எவ்வளவு எளிதாக வாங்கிப் படிக்கிறீர்கள்! புத்தகத்துக்குக் காகிதம் உபயோகப்படுகிறது அல்லவா? பாடம் எழுததுல், கணக்குப் போடுதல், காப்பி எழுதுதல் முதலியவற்றிற்கும் காகிதம் உதவு கின்றது. இவ்வளவு உபயோகமுள்ள காகிதம் எவ் வாறு செய்யப்படுகிறது? அது செய்யப்படும் விதத்தை நீங்கள் அறிந்தால் மிகவும் வியப்படை வீர்கள்.

4. காகிதம் செய்வதற்கு உபயோகமாகும் பொருள்கள் என்னென்ன வென்று பாருங்கள். கந்தைத் துணிகள், கிழிந்த கோணிப்பைகள், நாணல் போன்ற புற்கள், மிருதுவான கட்டையுள்ள மரங்கள் ஆகிய இவை யாவும் காகிதம் செய்ய உதவுகின்றன. ஆனால் சில ஆண்டுகளுக்கு முன் வரையில் கந்தை களே காகிதம் செய்வதற்கு மிகவும் உபயோகப் பட்டு வந்தன.

5. நாம் வேண்டாதவை எனக் கருதி எறியக்

கூடிய கந்தைகளையெல்லாம் விலை கொடுத்து வாங்கிக் கொண்டு போவார்கள். அவைகளைச் சுத்தம் செய்து தண்ணீரோடு கலந்து எந்திரங்களைக் கொண்டு நைய அரைத்து ஒருவகைக் கூழ்போல ஆக்கு வார்கள். பிறகு இக்கூழை, அடிப்புறத்தில் நுண்ணிய இரும்பு வலை உள்ள மரச்சட்டத்தில் முகந்து சிறிது



காகிதக்கூழ் தயார் செய்தல்

நேரம் கையில் வைத்திருந்தால் கூழில் உள்ள தண்ணீர் வலையின் வழியே கீழே வடியும்; கூழ் மெல்லிய ஆடைபோல் மேலே தங்கிவிடும். இத்தகைய பல ஆடைகளை மரப்பலகைகளுக் கிடையில் வைத்து அழுத்தி நீரையெல்லாம் போக்கி உலர வைத்தால்

அவை காகிதத் தாள்கள் ஆகிவிடும். இதுவே கையினுல் காகிதம் செய்யும் முறையாகும்.

6. ஆனுல், தற்காலத்தில் இந்த முறையில் காகிதம் செய்யப்படவில்லை. ஏன்? காகிதம் புத்தகங்களுக்கும், நோட்டுகளுக்கும், தினசரிப் பத்திரிகைகளுக்கும் மிக அதிகமாக வேண்டியிருக்கிறது. இவ்வளவுக்கும் வேண்டிய காகிதத்தை முன் சொன்ன மாதிரி கையினுல் செய்ய இயலுமா? இயலாதல்லவா? ஆகையால் காகிதம் செய்வதற்கென பெரிய ஆலைகள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கு ஆங்கிலத்தில் 'பேப்பர் மில்ஸ்' என்று பெயர். அவ்வாலைகளில் பெரிய பெரிய எந்திரங்கள் இருக்கும்.



காகிதம் உருளையில் சுற்றிக்கொள்ளுதல்

முன்னே மனிதன் கையினுல் செய்த வேலைகளை யெல்லாம் அவ்வெந்திரங்களே செய்கின்றன.

7. எந்திரங்களில் கந்தைகளைக் கூழாகச் செய்தல் இப்பொழுது மிகுதியாக நடைபெறுவதில்லை. ஒரு வகை மரத்தின் மென்மையான கட்டைகளும் மூங்கில் போன்ற மென்மையான கழிகளுமே இப் பொழுது கூழாகச் செய்யப்படுகின்றன. இக் கூழுக்கு ஆங்கிலத்தில் 'வுட் பல்ப்' என்று பெயர். இம்மரக் கூழே பலவகையான அழகிய காகிதமாக ஆகிவிடு கிறது. இஃது என்ன வியப்பு! நீங்கள் பல வர்ணக் காகிதங்களையும் பார்த்திருப்பீர்கள். வர்ணக் காகிதம் வேண்டுமானுல் மரக் கூழிலேயே வர்ணத்தைச் சேர்ப்பார்கள். காகிதம் செய்யும் ஆலைகள் கனடா, இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய மேல் நாடுகளில் அதிகம். இப்பொழுது நம் இந்திய நாட்டிலும் பல இடங்களில் காகிதம் செய்யும் ஆலைகள் ஏற்பட்டிருக் கின்றன. காகித ஆலைகளில் சில, ஒரு நிமிஷத் துக்கு ஒரு மைல் நீளம் காகிதம் உற்பத்தி செய் கின்றன.

8. காகிதத்துக்கு ஆங்கிலத்தில் என்ன பெயர் என்று கேட்டால் நீங்கள் 'பேப்பர்' என்று உடனே சொல்லுவீர்கள். 'பேப்பர்' என்று அதற்குப் பெயர் வந்தது ஏன்? எகிப்து என்னும் நாட்டில் முற்காலத் தில் 'பாபிரஸ்' என்னும் ஒரு வகைச் செடியிலிருந்து காகிதம் செய்தார்கள். அச்செடியின் பெயரே சிறிது மாறிப் 'பேப்பர்' எனக் காகிதத்துக்கு வழங்குகிறது.

'காகிதம்' என்று நாம் வழங்கும் பெயர் உருது மொழிப் பெயராகும். தமிழில் இதனைத் தாள் என்று சொல்லலாம்.

| | | | |
|---|---|---|---|
| அச்சு | கந்தை | முகந்து | பத்திரிகை |
| காகிதம் | கோத்து | சுலபம் | ஆக்கப்பட்ட |
| அட்டை | அதிருஷ்டம் | இடையில் | கோணிப்பை |
| ஆலை | எழுத்தாணி | சுவடி | வேண்டாதவை |
| நைய | நறுக்கு | வெறுமை | உற்பத்தி செய்தல் |
| தாள் | | | |

## அரும்பதவுரை

சுவடி - ஓலைப் புத்தகம். நைய - நன்றாக அழியுமாறு. உற்பத்தி செய்தல் - உண்டுபண்ணுதல்.

## பயிற்சி

**கேட்டவாறு மாற்றிப் படி :**

1. இவ்வளவு உபயோகம் உள்ள காகிதம் எவ்வாறு செய்யப்படுகிறது ?—' செய்கிறார்கள் ' என்ற சொல் பயனிலையாக வரும்படி.

2. மரக்கூழே பலவிதமான அழகிய காகிதமாக ஆகிவிடுகிறது—' மரக்கூழினால் ' என்று தொடங்கும்படி.

## கேள்விகள்

1. பேப்பர் என்று பெயர் உண்டாவதற்குக் காரணம் என்ன ?

2. காகிதம் செய்வதற்கு உபயோகப்படும் பொருள்கள் எவை ?

3. கையினால் காகிதம் செய்யும் முறை எப்படி ?



# 15. தாகூர்

**1.** நமது பாரத நாட்டில் சமீப காலத்தில் சிறந்து விளங்கிய புலவர்கள் பலர். அவர்களில் தலை சிறந்தவர் தாகூர் ஆவார். அவரது முழுப் பெயர் **இரவீந்திரநாத தாகூர்** என்பது.

**2.** இரவீந்திரர் 1861-ஆம் ஆண்டில் வங்க மாகாணத்தில் உள்ள **கல்கத்தா** நகரில் ஒரு செல்வக் குடும்பத்தில் பிறந்தார். அவர் தமது இளம் பருவத் திலேயே தாயாரை இழந்தார். அவர் தந்தையாரும் அடிக்கடி குடும்பத்தை விட்டு யாத்திரையாக வேறு

ஊர்களுக்குச் சென்றுவிடுவார். ஆதலால் தாகூர் தமது சகோதரர்கள் மேற்பார்வையில் குடும்ப வேலைக் காரர்களால் வளர்க்கப்பட்டு வந்தார்.

2. தாகூர் உரிய பருவத்தில் பள்ளிக்கூடம் சென்று சில ஆண்டுகள் படித்து வந்தார். அவர் பள்ளிக்கூடப் படிப்பை நீண்ட காலம் விரும்பவில்லை. ஆயினும் அவருக்குப் படிப்பில் விருப்பம் மிகுந் திருந்தது. அவர் கூர்மையான அறிவுள்ளவர். ஆத லால், வீட்டிலேயே தக்க ஆசிரியர் உதவியால் கல்வி பயின்று வந்தார்; மிக விரைவில் தமது தாய் மொழியாகிய வங்க மொழியிலும், ஆங்கில மொழி யிலும் தேர்ச்சி பெற்றுர்.

4. இரவீந்திரர் தமது பன்னிரண்டாவது வய திலேயே கவி பாடத் தொடங்கிவிட்டார். ஆயினும் அவரது பதினைந்தாவது ஆண்டிலிருந்துதான் நல்ல பாடல்கள் வெளியாயின.

5. தாகூருக்கு இருபத்திரண்டாவது வயதில் திருமணம் நடைபெற்றது. அவர் தமது மனைவியுடன் இல்வாழ்க்கையை மேற்கொண்டு இனிது வாழ்ந்து வந்தனர். எனினும் அவர் தமது வாழ்நாளில் பெரும் பகுதியைச் சிறந்த நூல்களைப் படிப்பதிலும், புதிய பாடல்களும் நவீனக் கதைகளும் இயற்றுவதிலும் கழித்தார்.

6. அவரது முப்பதாம் ஆண்டில் அவர் குடும் பத்துக்குச் சொந்தமான நிலபுலங்களைக் கவனிக்கும் பொருட்டுக் கிராம வாழ்க்கையை மேற்கொண்டார்.

அப்பொழுதுதான் அவர் கிராம மக்களின் உண்மை யான ஊழியத்தையும் உழைப்பையும் கண்ணுரக் கண் டார். ஆதலால் அவர்கள் நல்வாழ்வு பெற்றுச் சுகமாக மாக இருக்கவேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டார்.

7. தாகூருக்குத் தம் காலத்தில் நடத்தப்பெற்ற கலாசாலைகளின் கல்விமுறை பிடிக்கவில்லை. இயற் கைக் காட்சி நிரம்பிய இடத்தில் இயற்கையோடு ஒட்டிய கல்விமுறையே சிறந்தது என அவர் எண் ணிஞர். ஆதலால், தமது மாகாணத்தில் போல் பூருக்கு அருகே உள்ள ஒரு சிற்றூரில் ஒரு சிறு கல்விச்சாலையை ஏற்படுத்திஞர். அதுவே இப்பொ முது விசுவ பாரதி என்னும் பெயருள்ள ஒரு பெரிய கல்லூரியாக வளர்ந்துள்ளது.

8. இரவீந்திரர் பலமுறை ஐரோப்பா, அமெ ரிக்கா முதலிய வெளி நாடுகளுக்குச் சென்று பல அருமையான விரிவுரைகள் செய்தார். அவரது கல்விச் சிறப்பையும் பிரசங்கம் செய்யும் ஆற்றலையும் அறிந்த அறிஞர்கள் அவரைக் கொண்டாடிஞர்கள்.

9. தாகூர் இயற்றிய பாடல்களும் எழுதிய நவீன நூல்களும் மிகப் பலவாகும். ஆதலால் அவரைக் **கவியரசர்** என்றே விழங்கி வருகிருர்கள். நமது கவி யரசர் தமது தாய்மொழியாகிய வங்கமொழியில் அளவற்ற பற்றுள்ளவர். அவர் முதலில் தாய்மொழி யில் செய்யுள்கள் இயற்றுவார். பின்னர், வேண்டும் போது அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து

வெளியிடுவார். தாகூர் ஆங்கிலத்திலும் நிரம்பிய பயிற்சி யுடையவராதலின், ஆங்கிலத்திலும் பல பாடல்கள் பாடியுள்ளார். ஆதலின் அவர் புகழ் எங்கும் பரவியது; அவர் உலகம் போற்றும் புலவராக ஆனுர். அதனுலேயே ஏறத்தாழ ஒரு லட்ச ரூபாய் பெறுமானமுள்ள நோபல் பரிசு என்னும் ஒரு சிறந்த பரிசு சுவீடன் தேசத்து அரசாங்கத்தாரால் அவருக்கு வழங்கப் பெற்றது.

**10.** உலக மக்கள் எல்லோரும் ஒற்றுமையாகச் சகோதர பாவனையுடன் இன்புற்று வாழ வேண்டும் என்பது தாகூரின் எண்ணம். அதனுலேயே தாம் தோற்றுவித்த கலாசாலைக்கு 'விசுவ பாரதி' என்று பெயர் வைத்துள்ளார். விசுவ பாரதி என்ருல் 'உலக முழுதுக்கும் அறிவு புகட்டுவது' என்று பொருள்.

**11.** விசுவ பாரதியின் வளர்ச்சியிலும் பாதுகாப்பிலும் தாகூர் கண்ணும் கருத்துமாக இருந்தார். தமது குடும்பச் சொத்தில் தமக்குள்ள பங்கை விசுவ பாரதிக்கு உரிமையாக்கி உள்ளார். இவர் வங்கமொழியில் எழுதியுள்ள நூல்களினுல் வரும் ஊதியமும் விசுவபாரதிக்கே உரிமையாக்கப்பட்டுள்ளது.

**12.** இத்தகைய சீரும் சிறப்பும் பெற்ற இரவீந்திரநாத தாகூர் தமது எண்பதாம் ஆண்டில் (7-8-1941) இவ்வுலக வாழ்வை நீத்தார். அச்செய்தி கேட்ட அறிஞர் அனைவரும் வருந்தினர். உலக முழுதும் பேர்பெற்ற ஒரு கவியரசர் இறப்பது அனை

வருக்கும் வருத்தம் தரக்கூடியதன்றே? எனினும், அவர் இயற்றிய நூல்களாலும் அவர் ஏற்படுத்திய கல்லூரியாலும் அவரது பேர் அழியாது நீண்டகாலம் நிலவியிருக்கும்.

| | | | |
|---|---|---|---|
| உரிமை | யாத்திரை | நிலபுலம் | பேர்பெற்ற |
| ஆற்றல் | நவீனம் | கலாசாலை | உலகவாழ்வு |
| மேளுடு | திருமணம் | கல்லூரி | தலைசிறந்தவர் |
| பயிற்சி | வெளிநாடு | பிரசங்கம் | சகோதர பாவம் |
| விரிவுரை | வாழ்நாள் | மிகப்பல | அறிவு புகட்டும் |
| மாகாணம் | | | |

## அரும்பதவுரை

ஆற்றல் - வல்லமை. புலம் - வயல். புகட்டுதல் - ஊட்டுதல், கற்பித்தல். மாகாணம் - பல ஜில்லாக்கள் கொண்ட இராஜ்யப் பிரிவு. கலாசாலை - பள்ளிக்கூடம். சகோதர பாவனை-உடன் பிறந்தவர்களைப் போல் கருதுவது.

## பயிற்சி

### இலக்கணம்

1. அவன், இவள், பையன்கள், பெண்கள், அவர்கள்—இவைகள் உயர்திணைப் பெயர்ச் சொற்கள் அல்லவா? 'அவன்' என்பது ஒரு ஆணைக் குறிக்கிறது. 'இவள்' என்பது ஒரு பெண்ணைக் குறிக்கிறது. 'பையன்கள்' என்பது பல ஆண்களைக் குறிக்கிறது. 'பெண்கள்' என்பது பல பெண்களைக் குறிக்கிறது. 'அவர்கள்' என்பது பொதுவாகப் பலரைக் குறிக்கிறது.

உயர்திணையில் ஒரு ஆணைக் குறிப்பது ஆண்பால் எனப்படும்.

உயர்திணையில் ஒரு பெண்ணைக் குறிப்பது **பெண்பால்** எனப்படும்.

உயர்திணையில் பலரைக் குறிப்பது **பலர்பால்** எனப்படும்.

1. பசு, ஆடுகள், பழம், பழங்கள்—இவைகள் அஃறிணைப் பெயர்கள் அல்லவா ? இவற்றுள் 'பசு', 'பழம்' என்பன ஒன்றைக் குறிக்கும் சொற்கள். 'ஆடுகள், பழங்கள்' என்பன பலவற்றைக் குறிக்கும் சொற்கள்.

அஃறிணையில் ஒன்றைக் குறிப்பது **ஒன்றன்பால்** எனப்படும்.

அஃறிணையில் பலவற்றைக் குறிப்பது **பலவின்பால்** எனப்படும்.

**ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் எனப் பால் ஐந்து வகைப்படும்.**

3. தாகூர், மனைவி, புலவர்கள், சகோதரி, சகோதரர்கள், தவளை, பசு, எருதுகள், மரங்கள்—இப்பெயர்ச் சொற்கள் ஒவ்வொன்றும் என்ன பால் ?

## கேள்விகள்

1. தாகூர் எப்படிப்பட்ட கல்வி முறையை விரும்பினார் ?

2. அவர் ஏற்படுத்திய கல்விச்சாலையின் பெயர் என்ன ? அது எங்கே உள்ளது ? இப்போது அதற்கு ஏற்பட்டுள்ள பெயர் என்ன ?

3. தாகூர் பெற்ற சிறந்த பரிசு யாது ? அப்பரிசு யாரால் வழங்கப்பட்டது ? எதற்காக வழங்கப்பட்டது ?

4. 'விசுவபாரதி' என்பதற்குப் பொருள் என்ன ?

5. தாகூர் தம் சொத்தை எந்தத் தருமத்திற்கு உரிமையாக்கினார் ?

# 16. படம் பார்த்துக் கதை சொல்லல்–I

பின்வரும் படங்களைப்பார்த்துக் கதையைச் சொல்லு :—



# 17. கரும்பு

1. நீங்கள் கரும்பை விரும்பித் தின்பீர்கள். கரும்பு தின்னக் கூலி கேட்க மாட்டீர்களல்லவா? அதனால் தான் 'கரும்பு தின்னக் கூலியா?' என்னும் பழமொழி வழங்கி வருகிறது.

2. கரும்பு இவ்வாறு யாவராலும் விரும்பப்படுவதற்குக் காரணம் என்ன? அதிலுள்ள இனிமையான சாறே. கரும்பை வாயிலிட்டு மென்று சாற்றை உட்கொண்டு சக்கையை உமிழ்ந்து விடுகின்றோம். வெல்லம், சர்க்கரை, கற்கண்டு இவைகளும் இனிப்பான பொருள்களல்லவா? இவைகளெல்லாம் பெரும்பாலும் கருப்பஞ் சாற்றிலிருந்தே உண்டானவை. சிறுபான்மை பனஞ்சாற்றிலிருந்து வெல்லமும் கற்கண்டும் செய்வது உண்டு; அவைதான் பனவெல்லம், பனங்கற்கண்டு என்பவை.

3. கரும்பு புல்லினத்தைச் சேர்ந்தது. அது ஒரு அங்குலம் முதல் மூன்று அங்குலம் வரையில் கனமுள்ளதாக இருக்கும்; ஆறடி முதல் பதினைந்தடி உயரம் வரையில் ஓங்கி வளரும். கரும்பு நீண்டு திரண்டு மூங்கிற்கழிபோல் இருக்கும். அதனால் கரும்பைக் கருப்பங்கழி என்று கூறுவார்கள். கரும்பில் பல கணுக்கள் உண்டு. ஒவ்வொரு கணுவிலிருந்தும் ஒரு இலை தோன்றி அடுத்த கணு வரையில் கழியைச் சூழ்ந்து அதன் பிறகு தென்னை ஓலைபோல் வளரும். கரும்பின் இலைக்குக் கருப்பந் தோகை என்று பெயர்.

கரும்பு முதிர்ந்தால் அதன் நுனியில் பட்டுப்போன்ற வெண்மையான பூ கற்றையாகப் பூத்திருக்கும்.

4. கரும்பில் வெண்கரும்பு, செங்கரும்பு, நாமக் கரும்பு, ரஸ்தாளிக்கரும்பு, நாணற்கரும்பு எனப் பல வகை உண்டு. இவற்றுள் நாணற்கரும்பில் சாறு சிறிதே இருக்கும் ; அதுவும் சுவையற்றது. நாணற் கரும்பைப் பேய்க்கரும்பு என்றும் சொல்வது உண்டு. நாமக்கரும்பு, ரஸ்தாளிக்கரும்பு இவற்றில் சாறு நிரம்ப இருக்கும் ; இனிப்பாகவும் இருக்கும். ஆனால் செங்கரும்பு, வெண்கரும்பு இவற்றின் சாறுதான் மிகவும் இனிமையானது. இவ்வினிமைக்குக் காரணம் சாற்றில் சர்க்கரைச் சத்து அதிகமாக இருப்பதே. ஆதலால், இவ்வகைக் கரும்புகளே சர்க்கரை செய்ய மிகுதியும் உபயோகப் படுகின்றன.

5. கரும்பின் அடிப்பாகம் மிக இனிமையாக இருக்கும் ; மேலே போகப் போக இனிமை குறைந்து உவர்ப்பு மிகுந்திருக்கும். நுனியிலுள்ள கொழுத் தாடையில் இனிப்பே இராது ; உப்புக்கரிக்கும். கரும் பின் இத்தன்மை நல்லோர் தீயோர் இவர்கள் நட்புக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. தீயோர் சிநேகம் கரும்பை அடியிலிருந்து நுனிப்பக்கமாகத் தின்பது போலாகும். நல்லோர் சிநேகம் கரும்பை நுனியிலிருந்து அடிப்பக்கமாகத் தின்பதுபோல் ஆகும். இந்த உவமையால் நல்லோர் சிநேகம் நாளுக்கு நாள் இன்பம் தரும் என்பதும் தீயோர் நட்பு நாளு க்குநாள் துன்பம் தரும் என்பதும் தெரிகின்றன.

6. கரும்பு செழுமையான நீர்வளமுள்ள பூமி யில் நன்கு பயிராகும். கரும்பு பயிரிடுவதற்கு மிதமான வெப்பமுள்ள பிரதேசமே சிறந்தது. கரும்பு விதையிலிருந்து முளைப்பதில்லை ; கணுவிலுள்ள முளையிலிருந்தே முளைக்கிறது. கரும்பை ஒவ்வொரு துண்டிலும் ஒரு கணு இருக்கும்படி துண்டு துண்டாக வெட்டிக் கணு பூமியில் பதியும்படி பாத்தி களில் நடுவார்கள். ஒவ்வொரு கணுவிலுமுள்ள முளை முளைத்துக் கரும்பாக வளரும். கரும்பு வளரும் நிலத்தைக் கருப்பங் கொல்லை என்றும் கூறுவார்கள்.

7. முதிர்ந்த கருப்பங் கழிகளின் அடியில், வாழைக்கன்று முளைப்பதுபோல, குருத்துகள் முளைத் திருக்கும். ஆதலின் அவைகளையே அடுத்த ஆண் டின் பயிராக வளர்ப்பதும் உண்டு. இவ்விதம் இரண்டு மூன்றுண்டுகள்வரை, புதிது புதிதாக நடாமல் அங்குள்ள குருத்துகளையே பயிராக வளர்க்கலாம். ஆயினும், அவ்வாறு பயிராகும் கரும்பின் செழுமை வரவரக் குறைந்துவிடும்.

8. கரும்பு முற்றிப் பூக்கும் பருவம் அடையச் சுமார் ஒன்பது மாதம் செல்லும். அப்பருவம் தொடங்கும் பொழுது கருப்பங்கழிகளை வெட்டி ஆலைக்குக் கொண்டுபோவார்கள். ஆலை இருக்கும் இடம் ஆலைக் கூடம் என்று கூறப்படும். ஆலை இரும்பு உருளைகளால் ஆகியது. அவ்வுருளைகளோடு சம்பந்தப்பட்ட நீண்ட விட்டத்தை மாடுகள் இழுப்பதால் உருளைகள் சுழலும். அவ்விதம்

சுழலும் உருளைகளுக்கிடையில் தோகை கழித்த கருப்பங்கழிகளைத் துண்டுதுண்டாகக் கொடுப்பார்கள். உருளைகள் கரும்பை நசுக்கிச் சாற்றைப் பிழியும். இச்சாறு சிறிது தடிப்பாகவும் மங்கிய



வெண்மை நிறமாகவும் இருக்கும். ஆலையிலிருந்து வெளிப்படுஞ் சாறு அடியில் வைக்கப்பட்டுள்ள பாத்திரத்தில் வடியும். இவ்விதம் வடியும் சாற்றைச் சேகரித்துப் பெரிய இருப்புக் கொப்பரைகளில் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ச்சுவார்கள்.

9. காய்ச்சும்பொழுது சிறிது சுண்ணும்பு நீரைச் சேர்ப்பார்கள். இதனுல் கருப்பஞ்சாற்றில் சம்பந்தப் பட்டுள்ள அழுக்கு வெளிப்பட்டு நுரை போல் மேலே மிதக்கும். அதை வழித்து எறிந்து விடுவார்கள். .சாறு சுண்டிப் பதமானுல் பாகு

என்ற பெயர் பெறும். இப்பாகை மரத்தொட்டிகளில் ஊற்றி ஒரு விதத் துடுப்பினால் ஆற்றுவார்கள். ஆற்ற ஆற்றப் பாகு இறுகும். அப்பொழுது மரக் கட்டையினால் இரண்டொரு முறை தேய்த்தால் சர்க்கரை ஆகிவிடும். பாகு நன்கு இறுகுவதற்குள் மர அச்சுக்களில் ஊற்றினால் அது இறுகி வெல்லமாகி விடும். இவ்வெல்லமும் சர்க்கரையும் பழுப்பு நிறமாக இருக்கும்.

10. பழுப்புச் சர்க்கரையை நீரில் கரைத்து வடி கட்டி மீண்டும் காய்ச்சி வெள்ளைச் சர்க்கரை ஆக்குகிறார்கள். வெள்ளைச் சர்க்கரையினின்று கற்கண்டு செய்யப்படுகிறது.

11. கிராமங்களில் மாடுகளால் இழுக்கப்படும் சிறிய ஆலைகளில் கருப்பஞ்சாறு எடுக்கப்படுகிறது. ஆயினும் கரும்பு மிகுதியாகப் பயிராகும் இடங்களில் இப்பொழுது பெரிய கரும்பாலைகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளில் மிக விரைவில் ஏராளமான கரும்புகள் எந்திரங்களின் உதவியால் நசுக்கிப் பிழியப் படுகின்றன. அதனால் கருப்பஞ்சாறு மிக அதிகமாகக் கிடைக்கிறது. அவ்வாலைகளிலேயே எந்திரங்களைக் கொண்டு வெல்லம், சர்க்கரை, கற்கண்டு இவைகளும் மிகுதியாகச் செய்யப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| கூலி | உருளை | பாத்தி |
| பிழி | சக்கை | வெல்லம் |
| சாறு | இறுகுதல் | திரண்டு |
| பாகு | நடுதல் | குருத்து |
| நுரை | பதிதல் | முதிர்ந்தால் |
| கழி | நசுக்கல் | உட்கொண்டு |
| முனை | மங்கிய | கற்கண்டு |
| ஆலை | சுண்டுதல் | பிரதேசம் |
| ஓங்கி | உமிழ்ந்து | சேகரித்தல் |
| துடுப்பு | அங்குலம் | கொழுத்தாடை |

## அரும்பதவுரை

கொழுத்தாடை - கரும்பின் நுனிப்பாகம். பிரதேசம்-இடம். சேகரித்தல் - சேர்த்தல். முதிர்ந்த - முற்றின. நட்பு - சிநேகம்.

## பயிற்சி

1. விரும்பு, கவனி, உண், கட, பேசு—இவைகளைப் பெயர்ச் சொற்களாக மாற்று.

2. இனிமை, உமிழ், செய்வது, புல், அடி, இராது, நல்லோர், வெட்டி—இவைகள் ஒவ்வொன்றும் என்ன சொல்?

3. கரும்பு + சாறு = கருப்பஞ்சாறு—இதுபோல், கரும்பு + கொல்லை, கரும்பு + கழி, இவைகளைச் சேர்த்து எழுது.

4. வெண்மை + கரும்பு = வெண்கரும்பு—இதுபோல், செங்கரும்பு, செம்மண், கருங்குரங்கு, நுண்ணறிவு—இவைகளைப் பிரித்துக் கூறு.

5. 'கரும்பு' என்பதைப்பற்றி ஒரு கட்டுரை எழுது.

## இலக்கணம்

கரும்பு என்பது பெயர்ச் சொல். இது ஒரு பொருளின் பெயர். இலை, வேர், கை, கால் இவைகளும் பெயர்ச் சொற்கள்.

இவைகள் உறுப்பு அல்லது பாகத்தின் பெயர்கள். இம்மாதிரியே நிலம், வீடு இவைகள் இடத்தின் பெயர்கள். இனிப்பு, உவர்ப்பு, வெண்மை என்பன குணத்தின் பெயர்கள். செய்தல், உமிழ்தல், ஓட்டம் என்பன தொழிலின் பெயர்கள். ஆண்டு, மாதம், நாள், காலை, மாலை இவைகள் காலத்தின் பெயர்கள்.

பெயர்ச்சொற்கள் பொருட்பெயர், இடப்பெயர், காலப் பெயர், சினைப்பெயர் (சினை - உறுப்பு), குணப்பெயர் (குணம்-பண்பு), தொழிற்பெயர் என ஆறு வகைப்படும்.

வாய், புல், நுனி, அடி, செம்மை, நாணல், நட்பு, முளை, உருளை, அடுப்பு, மரம், மனிதர், பள்ளிக்கூடம், வைகாசி, பல்— இப் பெயர்ச்சொற்கள் ஒவ்வொன்றும் எந்த வகையைச் சேர்ந்தவை?

## கேள்விகள்

1. 'கரும்பு தின்னக் கூலியா ?' இப்பழமொழியை விளக்கு.
2. கரும்பு தாவர வகையில் எந்த இனத்தைச் சேர்ந்தது ? கரும்பில் என்னென்ன வகை உண்டு ?
3. நட்பிற்குக் கரும்பு உவமையாகும்—எப்படி ?
4. கரும்பைப் பயிரிடுவது எப்படி? கரும்பு பயிராக எத்தனை மாதம் செல்லும் ?
5. கரும்பிலிருந்து வெல்லமும் சர்க்கரையும் செய்வது எவ் வாறு ?

# 18. அதியமான்

1. நமது தமிழ் நாட்டில் பல வள்ளல்கள் இருந்திருக்கிறுர்கள். வள்ளல் என்பது சிறந்த கொடையாளிக்குப் பெயர். எவ்வளவு சிறந்த பொருளாக இருப்பினும் வள்ளல்கள் அதைப் பிறர்க்குக் கொடுக்கப் பின் வாங்க மாட்டார்கள். **அதியமான்** என்பவன் அத்தகைய சிறந்த வள்ளல்களில் ஒருவன்.

2. தமிழ்நாடு முற்காலத்தில் சேரநாடு, சோழ நாடு, பாண்டியநாடு என மூன்று பகுதியாக இருந்தது. இளங்கோ அடிகள் சேர நாட்டில் இருந்தவர் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா ? அதியமானும் சேர நாட்டில் இருந்தவனே.

3. சேரநாட்டில் **தகடூர்** என்னும் ஒரு ஊர் உண்டு. சேலம் ஜில்லாவில் உள்ள தர்மபுரி என்னும் ஊர் முற்காலத்தில் தகடூர் என்று வழங்கியது எனக் கூறுகின்றனர். அதியமான் அவ்வூரைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி செய்த ஒரு சிற்றரசன். அதியமான் சிற்றரசனுயினும் பெரிய வீரன்; சிறந்த வள்ளல்; 'பிறர் நலம்' கருதும் தன்மையுடையவன்; கல்வியில் மிகுந்த ஆர்வமுடையவன்; கற்றோர்களை ஆதரிப்பவன். ஆதலால், அதியமானைப் பெரிய அரசர்களும் மதித்தார்கள்; புலவர்களும் போற்றினூர்கள்.

4. ஔவையாரைப் பற்றி நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஔவையார் பெரும் புலவர் அல்லவா? ஆதலின், அவரை அதியமானும் ஆதரித்து வந்தான்; அவரிடத்தில் மிகுந்த அன்பும் மதிப்பும் உடையவனு யிருந்தான். ஔவையாரும் பல முறை அதியமானிடம் சென்று அளவளாவி வருவார்; நற்புத்தி புகட்டுவார்.

5. ஒரு சமயம் **காஞ்சி** நகரத்தில் இருந்த **தொண்டைமான்** என்னும் அரசனுக்கும் அதியமானுக்கும் பகைமை உண்டாயிற்று. அப்பொழுது அதியமான் ஔவையாரைத் தொண்டைமானிடம் தூது அனுப்பினுன். ஔவையார் தொண்டைமானிடம் சென்ருர். தொண்டைமான் தனது பெருமையை ஔவையாருக்குக் காட்டக் கருதி படைக்கலச் சாலைக்கு அழைத்துச் சென்று அங்குள்ள வாள், வேல் முதலிய ஆயுதங்களைக் காட்டினுன்.

6. ஔவையார் நுண்ணறிவு உடையவரல்லவா? அதனுல், அவன் கருத்தை எளிதில் அறிந்துகொண்டார். அவன் செருக்கை அடக்க எண்ணி "இந்த ஆயுதங்களெல்லாம் எண்ணெய் பூசப்பெற்று, இருந்த இடம்விட்டு மாருமலும் கூர் மழுங்காமலும் இரத்தக் கறையின்றிப் பளபளப்போடு அழகாக இருக்கின்றன; ஆனுல், அதியமான் ஆயுதங்களோ கூர் மழுங்கி இரத்தக் கறை உடையனவாய், பளபளப்பின்றிக் கொல்லன் உலைக்களத்தில் கிடக்கின்றன," என்று கூறினுர். ஔவையார் இவ்வாறு கூறியதன் கருத்தென்ன?

தொண்டைமான் ஆயுதங்களைக் கையாண்டு போர் செய்தலில் அநுபவமில்லாதவன் என்பதும், அதிய மான் ஆயுதங்களைக் கையாண்டு போர் செய்தலில் அநுபவமுள்ளவன் என்பதும் அல்லவா? ஔவை யாரின் கருத்தறிந்த தொண்டைமான் செருக்கடங்கி, ஔவையாரைப் போற்றி அதியமானிடம் தனக்கிருந்த பகைமையை ஒழித்தான்.

7. அதியமானுக்கு ஒரு சமயம் ஒரு கரு நெல்லிக்கனி கிடைத்தது. அது அமுதம் போன்றது; எளிதில் கிடைக்கக் கூடியதன்று. அதனை உண்போர் நீண்ட நாள் உயிரோடிருப்பர். அத்தகைய கனி யைப் பெற்ற அதியமான் அதனைத் தானுண்டு நீண்ட காலம் வாழ விரும்பவில்லை. கல்வியிற் சிறந்த பெரும் புலவராகிய ஔவையார் அதனை உண்டு நீண்ட ஆயுளோடிருந்து மக்களுக்கு நல்லறிவு புகட்ட வேண்டுமென்று எண்ணினான். அவ்வாறே அந் நெல் லிக்கனியை ஔவையாருக்குக் கொடுத்தான்.

8. இத்தகைய கொடை மிகச் சிறந்த தல்லவா? நீண்ட ஆயுளைத் தரும் அருமையான கனியைப் பெற்றும் அதனைத் தாம் உண்ணுமல் பிறருக்குக் கொடுக்கும் எண்ணம் எல்லோருக்கும் உண்டாகுமா? உண்டாகாது; சிறந்த வள்ளல்களுக்குத்தான் உண் டாகும். அதியமான் ஒரு சிறந்த வள்ளல்; ஆகை யால்தான், தான் பெற்ற கனியை ஔவையாருக்குக் கொடுத்தான். ஔவையாரும் அதனை உண்டு நெடுங் காலம் வாழ்ந்திருந்தார்.

**9. அதியமானின் கொடைத் திறத்தையும் வீரத்தையும்பற்றி ஔவையார் பல அருமையான பாடல்கள் பாடியுள்ளார். அவைகள் 'புறநானூறு' என்னும் நூலில் உள்ளன.**

| | | | |
|---|---|---|---|
| **தூது** | செருக்கு | உலைக்களம் | மழுங்காமல் |
| **வீரம்** | அடிகள் | பிறர்நலம் | மதித்தார்கள் |
| **ஆர்வம்** | தலைநகர் | பின்வாங்குதல் | ஆதரித்தல் |
| **ஆயுள்** | நுண்ணறிவு | அளவளாவுதல் | கொடையாளி |
| **தன்மை** | படைக்கலம் | | |

## அரும்பதவுரை

படைக்கலம் - போர்க்கருவி. நுண்ணறிவு - கூர்மையான புத்தி. செருக்கு - கர்வம். தூது - ஒருவர் கூறும் செய்தியை அவர் உத்தரவுப்படி மற்றவரிடம் போய்ச் சொல்லும் செயல். தூதர் - தூது சொல்லச் செல்பவர். அளவளாவுதல் - மனம் கலந்து பேசுதல். தன்மை - குணம்.

## பயிற்சி

### இலக்கணம்

1. அதியமான் கருநெல்லிக்கனியை ஔவையாருக்குக் கொடுத்தான். ஔவையார் பாடிய பல பாடல்கள் 'புறநானூறு' என்ற நூலில் இருக்கின்றன. நான் நாளைக்குச் சென்னை செல்வேன்—இம்மூன்று வாக்கியங்களின் இறுதியிலுள்ள கொடுத்தான், இருக்கின்றன, செல்வேன் என்ற வினைமுற்றுக்களைக் கவனி. 'கொடுத்தான்' என்பது செயல் முன்னமே நடந்ததைத் தெரிவிக்கிறது. 'இருக்கின்றன' என்பது இப்பொழுது செயல் நிகழ்வதைக் குறிக்கிறது. 'செல்வேன்' என்பது செயல் இனிமேல் நிகழும் என்பதைக் குறிக்கிறது.

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் (வருங்காலம்) எனக் காலம் மூன்று வகைப்படும்.

இறந்த காலம் என்பது சென்ற காலம்.

நிகழ் காலம் என்பது இப்பொழுது நடக்கிற காலம்.

எதிர் காலம் என்பது இனிமேல் வருங்காலம்.

2. காட்டினன், வருவாள், ஓடுகிருர், படிப்பான், உண்டான், தூங்குகிருன்—இவ் வினைச்சொற்கள் ஒவ்வொன்றும் என்ன காலம்?

3. பின் வரும் கட்டத்தில் கோடு உள்ள இடங்களைப் பூர்த்தி செய்:

| இறந்தகாலம் | நிகழ்காலம் | எதிர்காலம் |
|---|---|---|
| படித்தேன் | —— | —— |
| —— | —— | வருவார் |
| —— | ஓடுகிறது | —— |
| —— | போகிருய் | —— |
| விளையாடினர்கள் | —— | —— |
| —— | —— | கொடுப்பீர்களா |

## கேள்விகள்

1. வள்ளல் என்று யாருக்குப் பெயர்? மூன்று வள்ளல்களின் பெயர்களைச் சொல்லு.

2. தொண்டைமானின் ஆயுதங்கள் எவ்வாறு இருந்தன? ஏன்?

3. அதியமானின் ஆயுதங்களைப்பற்றி ஔவையார் என்ன கூறினர்? அவ்வாறு கூறியதன் கருத்து என்ன?




# 19. வேடனும் புறக்களும்

**பஞ்ச தந்திரக் கதை**

வனம்ஒன்றில் ஒருவேடன்
    வளர்குருவிக் கூட்டினெடும்
இனம்ஒன்று வேட்டைக்கரு
    விகளும்எடுத் தேதிரியக்
கனம்இருண்டு மழைபெய்யக்
    காற்றெழும்ப-அவனடுங்கி
மனம் இருண்டோர் மரத்தின்கீழ்
    வந்திருந்தான் ;அப்போது, 1.

தங்கும் அதன் மேலிருந்த
புருவொன்று தன்பேட்டை
'எங்ககன்றதோ ! வனத்தில்
யாரேனும் பிடித்தாரோ !
மங்கியதோ ! எனப்புகல,
அதுகேட்டு வனசரன்றன்
அங்கையுறு கூட்டில்உற்ற
பெண்புரு அழுதுசொலும் : 2.

'முன்வினையால் இதுபெற்றேன் ;
ஆயினும்நின் முனம்அடைந்த
இன்னவனுக் குபசாரம் புரி'
எனலும் எரிகொளுவி
அன்னவனை அழைத்'துடலின்
குளிர்போக்கி ஆகாரம்
என்னைநீ அருந்தென்று
வீழ்ந்திறக்க இவன்நோக்கி 3.

'அன்பினால் நம்பொருட்டு
வீழ்ந்த இதை அருந்தியிடில்
துன்பம்வரும்'. எனப்பேட்டை
விடுத்திடலும் சூழ்ந்ததுவும்
தன்புருடன் பிரிவதனால்
வீழ்ந்திறக்கத் தகுமிரண்டும்

இன்பமுறு தெய்வவுரு
எய்திவா னுலகடைந்த
இரக்கமொடு வேடுவனும்
எரிவீழ்ந்து கதியடைந்தான். 4.

—வீர மார்த்தாண்ட தேவர்

| | | | |
|---|---|---|---|
| புரு | எழும்ப | இன்னவன் | தெய்வவுரு |
| வினை | பேடு | அன்னவன் | அருந்துதல் |
| எரி | சூழ்ந்து | வனசரன் | அகன்றதோ |
| கதி | மங்கியது | முன்வினை | வானுலகம் |
| கனம் | அங்கை | | |

## அரும்பதவுரை

அங்கை - உள்ளங்கை. முனம் - முன்னே. வனசரன் - வேடன். பேடு - பெண் பறவை. எரி கொளுவி - நெருப்பு உண்டாக்கி. கனம் - மேகம். மனம் இருண்டு - மனம் வருந்தி. மங்கியதோ - இறந்ததோ. அருந்து - உண். அடைந்த - அடைந்தன. எரி - நெருப்பு.

## பயிற்சி

1. வேடன், மேகம், புரு, காற்று, மழை - என்று தொடங்கி ஒவ்வொரு வாக்கியம் கூறு.

2. இறந்தது, அடைந்தான், திரிகிறது—என்று முடியும்படியாக ஒவ்வொரு வாக்கியம் கூறு.

3. சொல்லும், திரிகிறான், அடைந்தன—இவ்வினைமுற்றுக்களுக்கு மற்ற இரண்டு காலங்கள் கூறு.

## இலக்கணம்

1. . இது முற்றுப்புள்ளி. வாக்கியத்தில் கருத்து முடியும் இடத்தில் இக்குறி வைக்கப்படும். அதுபோலவே வினாப் பொருள்

உள்ள இடத்தில் ? இக்குறி வைக்கப்படும். , இது காற் புள்ளி பொருளை நோக்கி இடையில் சிறிது நேரம் நிறுத்தவேண்டிய இடத்தில் இப்புள்ளி வைக்கப்படும். " " இவ்வாறு அமைக்கப்படும் புள்ளிகள் நேர்கூற்றுக் குறி எனப்படும். நேர்கூற்றுக் குறியை மேற்கோள் குறி என்றும் சொல்லலாம். இவை தமக்கு இடையில் உள்ள பகுதி முன்னே ஒருவரால் கூறப்பட்டது என விளக்கும்.

(உ - ம்.) கண்ணன், "நாளைக்கு வருகிறேன்," என்று சொன்னான்.

2. ஏற்ற நிறுத்துக் குறிகளை வை.
இளநீர் சுவை உள்ளது உனக்கு இளநீர் வேண்டுமா தம்பி எனக்கு நுங்கு வேண்டும் என்று கேட்கிறான்.

## கேள்விகள்

1. இந்தப் பாட்டுக்களில் அடங்கியுள்ள கதை என்ன?
2. இக்கதையினால் அறிந்துகொள்ளக்கூடிய நீதிகள் யாவை?
3. பேடையைக் காணாத ஆண்புறா எவ்வாறு வருந்திற்று?
4. வேடன் கையில் அகப்பட்ட பெண் புறா ஆண் புறாவைப் பார்த்து என்ன சொல்லிற்று?
5. ஆண்புறா வேடனை எவ்வாறு உபசரித்தது?

# 20. படம் பார்த்துக் கட்டுரை எழுதுதல்




மேலே உள்ள படங்களை வரிசையாகப் பார்த்து, பாலிலிருந்து நெய் தயாரித்தல் என்பதைப் பற்றி ஒரு கட்டுரை எழுது :—

# 21. கடிதம் எழுதுதல்

1. பிள்ளைகளே, நீங்கள் தபாற்காரரைப்பற்றிப் படித்திருக்கிறீர்கள் அல்லவா? தபாற்காரர் என்ன செய்கிறார்? தபாற்காரர் நமக்கு வேறொரு ஊரிலிருந்து வரும் கடிதத்தைக் கொண்டுவந்து கொடுக்கிறார்.

2. தூரத்தில் உள்ளவர்களுக்கு நாம் ஏதேனும் செய்தி தெரிவிக்க வேண்டுமானால் கடிதம் எழுதுகிறோம். அவர்களும் நமக்குச் செய்தி தெரிவிக்க வேண்டுமானால் கடிதம் எழுதுகிறார்கள். கடிதம் தபால் வழியே ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்கு வருகிறது. அவ்வாறு வரும் கடிதத்தில் உள்ள மேல் விலாசத்தைக் கொண்டு தபாற்காரர் அதை உரியவரிடம் கொடுக்கிறார்.

3. கடிதம் எழுதும்போது, முதலில் கடிதத்தின் தலைப்பில் வலது கைப்பக்கத்தில் நாம் எங்கிருந்து கடிதம் எழுதுகிறோமோ அந்த ஊரின் பெயரும் தேதியும் எழுதவேண்டும். அதன் கீழ் இடது கைப்புறத்தில் நாம் யாருக்குக் கடிதம் எழுதுகிறோமோ அவருக்குரிய முறைப்படி, 'என் அன்புள்ள தம்பி,' 'எனது அருமை நண்பா,' 'எனது பிரியமுள்ள தந்தையீர்,' 'அன்பார்ந்த ஐயா,' என்றிவ்வாறு எழுதவேண்டும். பிறகு அடுத்த வரியில் நமது வணக்கத்தையும் நலத்தையும் குறிக்கலாம். அதன் பின்பு, செய்தியை எழுதவேண்டும். கடிதம்

எழுதி முடிந்த பின்னர் வலது கைப்பக்கத்தில் நமது கையொப்பம் இடவேண்டும். கையொப்பம் இடுவதற்கு முன் 'அன்புள்ள,' 'உண்மையுள்ள,' 'கீழ்ப்படிதலுள்ள,' என்பவற்றுள் ஏற்றதொன்றை யெழுதி அதன் பிறகே கையொப்பம் இடவேண்டும்.

4. கடிதத்தில் விலாசத்துக்குரிய இடத்தில் நாம் யாருக்குக் கடிதம் எழுதுகிறோமோ அவருடைய விலாசத்தை எழுதவேண்டும்.

5. கீழே இரண்டு கடிதங்கள் உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளன :

## 1. முருகன் தனக்குப் பணம் அனுப்புமாறு தன் தந்தைக்கு எழுதிய கடிதம்

*உறையூர்,*
13—10—1954.

*எனது அன்புள்ள தந்தையீர்,*

உங்களுக்கு எனது அன்பார்ந்த வணக்கம். இங்கு நான் சௌக்கியமாக இருக்கிறேன். அங்கு எல்லா ருடைய சௌக்கியத்தையும் அறிய விரும்புகிறேன்.

எனக்குக் கணக்குப் புத்தகம் ஒன்று வேண்டும். என் செலவுக்கும் கொஞ்சம் பணம் வேண்டும். ஆகையால், எனக்கு மூன்று ரூபாய் பணம் அனுப்ப வேண்டுகிறேன். நான் கவனமாகப் படித்து வரு கின்றேன்.

இங்ஙனம்,
*தங்கள் அன்புள்ள*
முருகன்.

## 2. கந்தன் தன் வீட்டில் நடக்கும் விருந்துக்கு வருமாறு தன் நண்பன் ஒருவனுக்கு எழுதிய கடிதம்

சின்னக்கடைத் தெரு,
திருச்சிராப்பள்ளி.
1—11—1954.

எனதன்பார்ந்த நண்பா,

இங்கு யாவரும் நலம் ; அங்கு உனது நலத்தையும் மற்ற நண்பர்கள் நலத்தையும் அறிய விரும்புகின்றேன்.

எங்கள் வீட்டில் அடுத்த புதன்கிழமை காலை ஒரு விருந்து நடக்கப் போகிறது. அது என் தமக்கையின் கலியாணத்தைக் குறித்து நடத்தப்படுவதாகும். அதற்கு நீ அவசியம் வருமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
உனதன்புள்ள
**கந்தன்.**

| | | | |
|---|---|---|---|
| வரி | நலம் | முறைப்படி | கையொப்பம் |
| தேதி | கடிதம் | அவசியம் | கீழ்ப்படிதலுள்ள |
| தலைப்பு | ஏற்றது | தூரம் | மேல் விலாசம் |
| வணக்கம் | உரியவர் | சௌக்கியம் | |

### அரும்பதவுரை

நலம் - க்ஷேமம், சுகம். முறைப்படி - ஒழுங்காக, கிரமப்படி. கையொப்பம் - கையெழுத்து. அவசியம் - கட்டாயம்.

## பயிற்சி

1. உனக்கு வேண்டிய ஏதாவது ஒரு பொருள் வாங்கி யனுப்பும்படி உன் மாமாவுக்கு ஒரு கடிதம் எழுது.

2. உங்கள் ஊர்த் திருவிழாவுக்கு வரும்படி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.

## கேள்விகள்

1. கடிதம் எழுதும்போது தலைப்பில் குறிக்க வேண்டியவை எவை?

2. எங்கே கையொப்பம் இடவேண்டும்?

3. உன்னுடைய உபாத்தியாயருக்கு எழுதும் கடிதத்தை எவ்வாறு தொடங்குவாய்?

# 22. கிளிக் கண்ணி

[போலிப் பக்தர்கள்]

1. நெஞ்சில் உரமும் இன்றி
நேர்மைத் திறமும் இன்றி
வஞ்சனை சொல்வாரடி—கிளியே
வாய்ச் சொல்லில் வீரரடி.

2. கூட்டத்திற் கூடி நின்று
கூவிப் பிதற்றல் அன்றி
நாட்டத்திற் கொள்ளாரடி—கிளியே
நாளில் மறப்பாரடி.

3. ஊக்கமும் உள்வலியும்
உண்மையிற் பற்றும் இல்லா
மாக்களுக் கோர்கணமும்—கிளியே
வாழத் தகுதி யுண்டோ?

4. மானம் சிறிதென் றெண்ணி
வாழ்வு பெரிதென் றெண்ணும்
ஈனர்க் குலகந் தன்னில்—கிளியே
இருக்க நிலைமை யுண்டோ?

5. சொந்தச் சகோத ரர்கள்
துன்பத்திற் சாதல் கண்டும்
சிந்தை யிரங்காரடி—கிளியே
செம்மை மறந்தாரடி.

—பாரதியார்

| | | |
|---|---|---|
| உரம் | வஞ்சனை | நாட்டம் |
| பற்று | மானம் | பிதற்றல் |
| ஈனர் | சிந்தை | உள்வலி |
| தகுதி | செம்மை | வாய்ச்சொல் |
| கணம் | மாக்கள் | நேர்மைத்திறம் |

## அரும்பதவுரை

பற்று - ஆசை. உரம் - உறுதி, வன்மை. சிந்தை - மனம். நாட்டம் - கருத்து. நேர்மை - ஒழுங்கு. மாக்கள் - அற்ப மனிதர்கள். ஈனர் - தாழ்ந்தவர். கணம் - நிமிஷம்.

## பயிற்சி

நின்று, சொல்வார், பிதற்றல், கூடி, உண்டோ, உரம், எண்ணி, எண்ணும், இருக்க, துன்பம்—இவைகள் ஒவ்வொன்றும் என்ன சொல்?

## கேள்விகள்

1. பாரதியார் யாரை ஈனர் என்று சொல்லுகிறார்?
2. செம்மை மறந்தவர் யார்?
3. இப்பாட்டிலிருந்து, நாம் எப்படி வாழவேண்டுமென்று தெரிகிறது?

# 23. பழமொழிகள்

நூற்றுக்கு மேல் ஊற்று.

பாடமேறினும் ஏடது கைவிடேல்.

பெற்றமனம் பித்து ; பிள்ளை மனம் கல்லு.

முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்.

எருதுப் புண் காக்கை அறியுமா ?

உள்ளத்தைச் சொன்னால் உடம்பெரிச்சல்.

அன்னம் இட்ட வீட்டில் கன்னம் இடல் ஆகுமா?

மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா.

பூவோடு சேர்ந்த நாறும் மணம் பெறும்.

புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது.

ஆறிலும் சாவு ; நூறிலும் சாவு.

அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் நஞ்சு.

எய்தவன் இருக்க அம்பை நோவலாமா ?

ஏழை பேச்சு அம்பலம் ஏறுமா ?

பலாப் பழத்துக்கு ஈப்பிடித்து விடவேண்டுமா ?

கரும்பு கட்டோடு இருந்தால் எறும்புதானேவரும்.

காற்றுள்ள போதே தூற்றிக்கொள்.

பட்ட காலிலே படும் ; கெட்ட குடியே கெடும்.

பழகப் பழகப் பாலும் புளிக்கும்.

நிறைகுடம் நீர் தளும்பாது.

| | | |
|---|---|---|
| ஊற்று | மூர்க்கன் | கைவிடேல் |
| பித்து | அம்பலம் | கெட்டகுடி |
| கன்னம் | தளும்பாது | தூற்றிக்கொள் |

## அரும்பதவுரை

கைவிடேல் - விட்டு விடாதே. பித்து - பைத்தியம். அம்பலம் - சபை, கூட்டம், கெட்டகுடி - வாழ்வு அழிந்த குடும்பம்.

## பயிற்சி

I. வினாக்குறியை நீக்கி, முற்றுப்புள்ளி வரும்படி வாக்கியங்களை மாற்றி வாசி.

1. எருதுப்புண் காக்கை அறியுமா?
2. அன்னம் இட்ட வீட்டில் கன்னம் இடலாமா?
3. ஏழை பேச்சு அம்பலம் ஏறுமா?

II. முற்றுப்புள்ளியை நீக்கி, வினாக்குறி வரும்படி வாக்கியங்களை மாற்றி வாசி.

1. நிறை குடம் தளும்பாது.
2. புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது.
3. முயற்சியுடையார் இகழ்ச்சியடையார்.

## கேள்விகள்

1. கெட்ட குடியே கெடும் - எதைப்போல்?
2. அம்பலத்தில் ஏறாது - எது?
3. பாலும் புளிக்கும் - எப்போது?
4. இகழ்ச்சி யடையார் - யார்?

# 24. குமணன்

[ஓர் நாடகம்]

## காட்சி 1

**இடம் :** குமணன் அரண்மனை.

**பாத்திரங்கள் :** குமணன், அமணன்.

**குமணன் :** தம்பி அமணு, நீ ஏன் சிறிது முக வாட்டத்தோடு இருக்கிருய்?

**அமணன் :** அண்ணு, வேறென்றுமில்லை. நீங்கள் நமது பொருளையெல்லாம் புலவர்களுக்கும் இரவலருக்கும் வாரி வாரிக் கொடுக்கிறீர்களே. அதை நினைக்கும்போது எனக்கு மிக்க கவலை ஏற்படுகிறது.

**குமணன் :** ஏன் கவலைப்பட வேண்டும்? பொருளை நாம் பிறக்கும்போது கொண்டு வந்தோமா? இறக்கும்போது கொண்டு போவோமா? அழியுந் தன்மையுள்ள பொருள் படைத்ததன் பயன் புலவர்களுக்கும் இரப்போர்க்கும் கொடுத்து அழியாத புகழைப் பெறுவதன்ரே?

**அமணன் :** அண்ணு, என்ன புகழ் வேண்டியிருக்கிறது! புலவர்க்கும் இரப்போர்க்கும் பொருளைக் கொடுப்பதனல் நாம் அவர்களைச் சோம்பேறிகளாக ஆக்குகிரேம். அதனேடு நமது பொருளும் போய் விடுகிறதே!

**குமணன் :** புலவர்களா சோம்பேறிகள்! அவர்கள் தம் வாழ்நாள் முழுவதையும் கல்விப் பயிற்சியிலேயே கழிப்பவர்கள் ஆயிற்றே. அவர்கள் நம்

போன்றவர்களுக்குப் பல நீதிகளைத் தங்கள் அரிய பாடல்கள் மூலம் புகட்டி வருகின்றவர்கள். அவர்களை நாம் ஆதரிக்காவிடில் வேறு யாவர் ஆதரிப்பார்? இரவலரும் பொருளீட்ட இயலாதவர்கள். அவர்களை ஆதரிப்பதும் நமது கடமையாகும்...ஆ, இதோ ஒரு புலவரும் வருகிறார்.

[பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் பரிசில் பெறக் குமண வள்ளலிடம் வருகின்றார்.]

**குமணன் :** புலவர் பெருமானே, வருக வருக. உங்கள் வரவு நல்வரவாகுக.

**பெருஞ்சித்திரனார் :** குமண வள்ளலே, நீண்ட நாளாக உங்களைக் காண விரும்பியதுண்டு. எனினும் இன்று தான் காண நேர்ந்தது. உங்களைக் கண்டமையால் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

**குமணன் :** புலவரே, யானும் உங்களைக் கண்டமையால் மகிழ்ச்சியுற்றேன். சரி, ஏதேனும் செய்தி உளதோ?

**பெருஞ்சித்திரனார் :** செய்திக்கு என்ன குறைவு? யானும் எனது மனைவி மக்களும் பசியால் வாடி வருந்துகின்றோம். சோறு கண்டு பல நாட்களாயின.

**குமணன் :** அப்படியா! இதோ, இந்தப் பொருளையெல்லாம் எடுத்துக் கொண்டுபோய் உங்கள் வறுமையைப் போக்கிக் கொள்ளுங்கள்.

[குமணன் ஏராளமாகப் பொருளை வாரிப் புலவருக்கு வழங்குகின்றான். அதைக் கண்டு அமணன் மனம் மிகவும் புழுங்குகின்றான்.]

**அமணன் :** இது என்ன அறியாமை! இப்படிப் பொருளை வாரி வாரி வீசிக்கொண்டிருந்தால் அரண்மனைப் பொன்னறை காலியாகி விடுமே! பொருளில்லாவிடில் அரசாட்சி எவ்வாறு நடைபெறும்? நாடும் விரைவில் அழிந்து விடுமே!

**குமணன் :** தம்பி, நீ கொடையின் பெருமை அறியாது ஏதேதோ கூறுகிறாய்; பொருளையே பெரிதாக நினைத்துக்கொண்டிருக்கிறாய். சரி, இந்த நாட்டை நீயே ஒப்புக்கொள். யான் இன்றே காடு செல்லுகின்றேன்.

[குமணன் காடு செல்ல, அமணன் நாட்டைக் கைப்பற்றி அரசனாகித் தன் அண்ணன் உயிரோடிருக்கும் வரை நாடு சொந்தமாகாது என்னும் கருத்துடையவனாய், குமணனின் தலையைக்கொண்டு வருகின்றவருக்குப் பதினாயிரம் பொன் பரிசில் தருவதாகப் பறை அறைவிக்கிறான்.]

## காட்சி 2

· **இடம் :** காடு.

**பாத்திரங்கள் :** பெருந்தலைச் சாத்தனாரும் குமணனும்.

[குமணனைக் காண எண்ணிய பெருந்தலைச் சாத்தனார் அவன் காடு சென்றிருக்கும் செய்தியை யறிந்து தாமும் காடு சென்று தேடிக் குமணன் இருப்பிடத்தை அடைகின்றார்.]

**குமணன் :** சாத்தனாரே, வருக. ஏது இவ்வளவு தூரம்?

**சாத்தனார் :** குமண வள்ளலே, யான் உங்களைப் பார்க்கும் பொருட்டு உங்கள் ஊர் செல்லக் கருதினேன். எனினும், நீங்கள் நாட்டை விட்டுக்

னாட்டுக்கு வந்திருக்கும் செய்தி யறிந்து உங்களைக் காண வேண்டும் என்னும் அவாவினால் இங்கு வந்தேன்.

**குமணன் :** புலவரே, நல்லது. இப்பொழுது எது கருதி வந்தீர்கள்?

**சாத்தனார் :** வள்ளலே, எனது மனைவியும் குழந்தையும் உணவின்றி வருந்துகின்றனர். குழந்தை பசிக் கொடுமையால் தாய் முகம் நோக்க, அவள் என் முகம் நோக்கினள். அதனால், யான் இங்கு வந்து உங்கள் முகம் நோக்குகின்றேன்.

**குமணன் :** புலவரே, யான் நாட்டில் இருக்கும் காலத்தில் வந்திருந்தால் வேண்டுவதெல்லாம் பெற லாம். அப்பொழுது வராமல் இப்பொழுது இங்கு வந்து உங்கள் வறுமையைத் தெரிவிக்கின்றீர்களே! யான் யாது செய்வேன்?

**சாத்தனார் :** அரசே, ஆறு நீர்ப்பெருக்கு அற்ற காலத்திலும் ஊற்று நீரால் உலகத்தார்க்கு உபகாரம் செய்யுமன்றோ?

**குமணன் :** (சிறிது யோசித்து) சாத்தனாரே, சரி. என் தம்பியாகிய அமணன் என் தலையைக் கொண்டு வருவோர்க்குப் பதினாயிரம் பொன் தருவதாகக் கூறி யிருக்கிறான். இதோ, இந்த வாளினால் என் தலையைக் கொய்து கொண்டுபோய் என் தம்பி கையிற் கொடுத் துப் பொன் பெற்று, உங்கள் வறுமை நோயைப் போக்கிக் கொள்ளுங்கள்.

[குமணன் வாளை நீட்டுகின்றான். புலவர் வியப்பும் திகைப்பும் உடையவராய்ச் சற்று யோசித்து அவ்விடம் விட்டு நீங்கி ஒரு சிற்பியினிடம் சென்று குமணன் தலைபோல் ஒரு பொய்த் தலை செய்து கொண்டு அமணன் அரண்மனை அடைகின்றார்.]

## காட்சி 3

இடம் :—அரண்மனையும் அரச வீதியும்.

பாத்திரங்கள் :—அமணன், சாத்தனார், குமணன்.

[அமணனுக்கு இளங்குமணன் என்னும் பெயரும் உண்டு.]

**சாத்தனார் :** இளங்குமணரே, இதோ உங்கள் தமையன் தலையைக் கொண்டு வந்திருக்கிறேன்.

[பொய்த்தலையைக் காட்ட, அமணன் அதை உண்மைத்தலையென்றே கருதுகின்றான்.]

**அமணன் :** ஆ! அண்ணா, அண்ணா, என்ன செய்வேன்! 'அண்ணா' என்று இனி யாரை அழைப்பேன். ஐயோ! உங்கள் பெருமையை அறியாமல் உங்களைக் கொல்லத் துணிந்தேனே! யான் ஒரு பெரும் பாவி அல்லவா? உங்களை மீண்டும் எப்பொழுது காண்பேன். எனக்கு இனி நல்வாழ்வு ஏது?

**சாத்தனார் :** இளங்குமணரே, வருந்த வேண்டாம்; வருந்த வேண்டம். உமது அண்ணனை யான் உயிர்ப்பித்துக் காட்டினால் எனக்கு என்ன கொடுப்பீர்?

**அமண்னன் :** புலவரே, உயிர்ப்பித்துக் காட்டுவீர்களா? என் அருமை அண்ணனை உயிர்ப்பித்தால் கோடி பொன் தருவேன். இன்னும் என் உயிரையும் கொடுப்பேன்.

**சாத்தனார் :** சரி, இதோ சென்று குமணனை உயிரோடு அழைத்துக் கொண்டு வருகின்றேன்.

[புலவர் காடு சென்று குமணனிடம் செய்தி அறிவித்து அழைத்துக் கொண்டு வருகிறார். அமணன் ஏவலரால் தன் தமையன் வருவதறிந்து எதிர்கொண்டு சென்று அரசவீதியில் காண்கின்றான்.]

**அமணன் :** எனதருமை அண்ணா, வருக வருக. சிறியேன் செய்த பெரும்பிழையைப் பொறுத்தருள வேண்டும்.

[அமணன் கீழே விழுந்து குமணனை வணங்குகின்றான். குமணன் தம்பியை எடுத்து மார்போடு தழுவிக் கொள்ளுகிறான்.]

**குமணன் :** தம்பி வருந்தாதே; உன் அறியாமையால் முன்பு என்னை வெறுத்தாய். இப்பொழுது உனக்கு அறிவு வந்தமையாலும் சகோதர அன்பாலும் என்னை விரும்புகின்றாய். இது நலமே. நடந்த காரியத்தைப் பற்றி, இனி யாதும் நினைக்க வேண்டாம்.

[அனைவரும் அரண்மனை அடைகின்றார்கள்.]

**அமணன் :** அண்ணா, எனக்கு, இனி நாடு வேண்டாம்; நீங்களே முன்போல அரசராக இருங்கள்.

**குமணன் :** தம்பி, உன் விருப்பப் படியே ஆகட்டும். ஆனால், நீ இளவரசனாக இரு.

**அமணன் :** நீங்கள் விரும்புகிற படியே ஆகட்டும், அண்ணா.

**குமணன் :** (சாத்தனரை நோக்கி), புலவர் பெரு மானே, இதோ இந்தப் பொருள்களை யெல்லாம் எடுத் துக் கொள்ளுங்கள். உங்கள் சூழ்ச்சித் திறத்தினல் என் தம்பி இளங்குமணன் நல்லுணர்வு பெற்ருன். யான் மீண்டும் அரசனுகிப் புலவரைப் போற்றும் புண்ணியம் பெற்றேன்.

[புலவர் பொருள் பெற்றுக் குமணனை வாழ்த்திச் செல் கின்ருர்.]

# 25. வெற்றிவேற்கை

வெற்றிவேற்கை என்பது ஓர் நீதி நூல். இது "நறுந் தொகை" என்றும் கூறப்படும். இந்நூல் 'வெற்றிவேற்கை வீரராமன்' என்று தொடங்கிப் பாடப்பெற்றமையால் இதற்கு 'வெற்றிவேற்கை' என்னும் பெயர் வழங்கப் பெறுகின்றது. இந் நூலைப் பாடியவர் அதிவீரராம பாண்டியன் என்னும் அரசர். அவர் பாண்டிய நாட்டில் உள்ள கொற்கை நகரைத் தலைநகராகக் கொண்டு அரசாட்சி செய்தவர்.

வெற்றி வேற்கை வீர ராமன்
கொற்கை யாளி குலசே கரன்புகல்
நற்றமிழ் தெரிந்த நறுந்தொகை தன்னால்
குற்றம் களைவோர் குறைவிலா தவரே.

### ஆசிரியர் பெருமை

1. எழுத்தறி வித்தவன் இறைவன் ஆகும்.

### அழகு செய்பவை

2. கல்விக் கழகு கசடற மொழிதல்.
3. செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.
4. மன்னவர்க்கழகு செங்கோல் முறைமை.
5. மந்திரிக் கழகு வரும்பொ ருளுரைத்தல்.
6. தந்திரிக் கழகு தறுகண் ஆண்மை.
7. உண்டிக் கழகு விருந்தோ டுண்டல்.
8. குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்.
9. வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை.

### பெருமையும் சிறுமையும்

10. தேம்படு பனையின் திரள்பழத் தொருவிதை
வானுற வோங்கி வளம்பெற வளரினும்
ஒருவர்க் கிருக்க நிழலா காதே.

11. தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதே யாயினும் அண்ணல் யானை
அணிதேர் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலா கும்மே.

12. பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர்.

13. சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர்.

14. அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது.

15. சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது.

16. அரைக்கினும் சந்தனம் தன்மணம் அறாது.

17. புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது.

18. கலக்கினும் தண்கடல் சேறா காது.

19. பெருமையும் சிறுமையும் தான்தர வருமே.

### பிழை பொறுத்தல்

20. சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்
பெரியோ ராயின் பொறுப்பது கடனே.

21. சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின்
பெரியோர் அப்பிழை பொறுத்தலும் அரிதே.

## நட்பு

22. ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே.
23. நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை
நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள் ளாதே.

## கல்விச் சிறப்பு

24. கற்கை நன்றே கற்கை நன்றே
பிச்சை புகினும் கற்கை நன்றே.
25. கல்லா ஒருவன் குலநலம் பேசுதல்
நெல்லினுட் பிறந்த பதரா கும்மே.
26. நாற்பாற் குலத்தில் மேற்பால் ஒருவன்
கற்றில னாயின் கீழிருப் பவனே.
27. எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்
அக்குடியிற் கற்றோரை மேல்வருக என்பர்.
28. அறிவுடை யொருவனை அரசனும் விரும்பும்.

## இன்னார்க்கு இது இல்லை எனல்

29. யானைக் கில்லை தானமும் தருமமும்.
30. பூனைக்கில்லை தவமும் தயையும்.
31. ஞானிக் கில்லை இன்பமும் துன்பமும்.
32. அச்சமும் நாணமும் அறிவிலோர்க் கில்லை.
33. நாளும் கிழமையும் நலிந்தோர்க் கில்லை.
34. கேளும் கிளையும் கெட்டோர்க் கில்லை.

## நிலையாமை

### (1) செல்வமும் வறுமையும்

35. உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா.

36. குடைநிழ லிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர்
நடைமெலிந்தோரூர் நண்ணினும் நண்ணுவர்.

37. சிறப்பும் செல்வமும் பெருமையும் உடையோர்
அறக்கூழ்ச் சாலை அடையினும் அடைவர்.

38. எழுநிலை மாடம் கால்சாய்ந் துக்குக்
கழுதை மேய்பாழ் ஆயினும் ஆகும்.

39. அறத்திடு பிச்சை கூவி இரப்போர்
அரசோ டிருந்தர சாளினும் ஆளுவர்.

40. பெற்றமும் கழுதையும் மேய்ந்த அப்பாழ்
பொற்றொடி மகளிரும் மைந்தரும் செறிந்து
நெற்பொலி நெடுநகர் ஆயினும் ஆகும்.

41. இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே.

42. இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே.

### (2) யாக்கை

43. மணவணி அணிந்த மகளிர் ஆங்கே
பிணவணி அணிந்ததம் கொழுநரைத் தழீஇ
உடுத்த ஆடை கோடி யாக
முடித்த கூந்தல் விரிப்பினும் விரிப்பர்.

### இதற்கு இது அஞ்சும் எனல்

44. தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே.

45. குன்றுடை நெடுங்கா டூடே வாழினும்
புன்தலைப் புல்வாய் புலிக்கஞ் சும்மே.

### இதனினும் இதுநன்று எனல்

46. கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டின்
கடும்புலி வாழும் காடு நன்றே.
47. சான்றோர் இல்லாத் தொல்பதி யிருத்தலின்
தேன்தேர் குறவர் தேயம் நன்றே.

### பதர்

48. காலையும் மாலையும் நான்மறை யோதா
அந்தணர் என்போர் அனைவரும் பதரே.
49. குடியலைத் திரந்துவெங் கோலொடு நின்ற
முடியுடை இறைவனும் மூர்க்கனும் பதரே.
50. முதலுள பண்டம் கொண்டுவா ணிபம் செய்து
அதன்பய னுண்ணு வணிகரும் பதரே.
51. வித்தும் ஏரும் உளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும் பதரே.
52. தன்னு யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே.

### பொய்யும் மெய்யும்

53. பொய்யுடை யொருவன் சொல்வன் மையினல்
மெய்போ லும்மே மெய்போ லும்மே.
54. மெய்யுடை யொருவன் சொலமாட் டாமையால்
பொய்போ லும்மே பொய்போ லும்மே.

55. இருவர்தம் சொல்லையும் எழுதரம் கேட்டே
இருவரும் பொருந்த உரை யாராயின்
மனுமுறை நெறியின் வழக்கிழந் தவர்தாம்
மனமுற மருகிநின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி ஈர்வதோர் வாளா கும்மே.

பழிச்சொல்

56. பழியா வருவது மொழியா தொழிவது.

பிரயாணம்

57. துணையோ டல்லது நெடுவழி போகேல்.
58. புணைமீ தல்லது நெடும்புனல் ஏகேல்.
59. வழியே ஏகுக வழியே மீளுக.

வாழ்த்து

60. வாழிய நலனே வாழிய நலனே.

| | | | |
|---|---|---|---|
| ஆ | முறைமை | வேதியர் | அடினும் |
| அணி | ஆண்மை | வணிகர் | பிணவணி |
| மறை | உண்டி | தந்திரி | புன்தலை |
| பழி | வறுமை | தறுகண் | சான்றோர் |
| புணை | செம்மை | அறிஞர் | தொல்பதி |
| தேன் | திரள் | வறிஞர் | குறவர் |
| படு | கயம் | கொழுநன் | ஏய்த்து |
| கிளை | புரவி | தெள்ளிய | கார்வார் |
| கசடு | அருது | நுண்ணிது | செழுங்கிளை |
| வேதம் | அகில் | அண்ணல் | தாங்குதல் |
| ஒளி | ஒழுக்கம் | உணர்ந்து | அடங்கல் |

| | | | |
|---|---|---|---|
| பிழை | பதர் | புகினும் | பொல்லாங்கு |
| தயை | தானம் | குஞ்சம் | பொறுத்தல் |
| ஞானி | தவம் | பெற்றம் | குலநலம் |
| பாழ் | நாணம் | பொற்றொடி | நலிந்தோர் |
| பொலி | உடைமை | மைந்தர் | சொல்வன்மை |
| கோடி | தேயும் | செறிந்து | வரும்பொருள் |
| ஊடே | புனல் | மணவணி | சொலமாட்டாமை |
| கேண்மை | கமழாது | குலமகள் | அறக்கூழ்ச்சாலை |

## அரும்பதவுரை

எழுத்து - கல்வி. அறிவித்தவன் - கற்றுக் கொடுத்தவர் (ஆசிரியர்). கசடு - குற்றம், பிழை. செழுங்கிளை - நெருங்கிய சுற்றத்தார். தந்திரி - சேனைத்தலைவன். தறுகண் - அஞ்சாமை. கொழுநன் - கணவன். செம்மை - ஒழுக்கம் கெடாமல் இருத்தல்.

தேம்படு - கள் உண்வாகும். தெண்ணீர்க் கயம் - தெளிவாகிய நீரையுடைய குளம். சினை - முட்டை. அண்ணல் - பெருமை பொருந்திய. அணி - அழகிய. புரவி - குதிரை. அடினும் - காய்ச்சினாலும். பொல்லாங்கு - தீமை. தண்கடல் - குளிர்ச்சி பொருந்திய கடல்.

தான்தர - தானே தனக்குத் தந்துகொள்ள. கடன்-கடமை. கேண்மை - நட்பு. இருநிலம் - பெரிய பூமி. வேர்வீழ்க்கும் - வேரூன்றும், உறுதிப்படும்.

குலநலம் - தான் பிறந்த குலத்தின் சிறப்பு. அரசனும் விரும்பும் - அரசனும் விரும்புவான்.

நாணம் - வெட்கம். நலிந்தோர் - மெலிந்தோர், நோயாளிகள். கெட்டோர் - செல்வம் குன்றியவர்கள்.

உடைமை - செல்வம். குஞ்சரம் - யானை. நண்ணினும் - அடைந்தாலும். நண்ணுவர் - அடைவர். அறக்கூழ்ச்சாலை - தருமத்திற்குச் சோறுபோடும் சத்திரம். பெற்றம் - எருது. பொற்

ரொடி (பொன் + தொடி) தங்கவளையல்களை யணிந்தவள். உடையோர் - செல்வம் படைத்தவர்கள்.

மணவணி - கலியாணக்கோலம். அணிந்த - பூண்ட. கோடி - புதுத்துணி.

நெடுங்காடூடே - பெரிய காட்டினுள்ளே. புன்தலை - சிறிய தலை. புல்வாய் - மான்.

சான்றோர் - பெரியோர். தொல்பதி - பழைய நகர். குறவர்-மலைநாடுகளில் வாழும் மக்கள்.

குடியலைத்து - குடிகளை வருத்தமுறச் செய்து. இரந்து - வரிவாங்கி. சொல்வன்மை - பேசும் சாமர்த்தியம். சொலமாட்டாமை - சாமர்த்தியமாகப் பேசமுடியாமை. புணை - தெப்பம். புனல் - நீர்.

